## ஆசிரியர் குழு



## உள்ளுறை

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்
19ஆவது ஆண்டு பரிசு அளிப்பு விழா 16-3-63



விழாத்தலைவர்:- ஸ்ரீகாசி மடம் இளவரசு, வித்துவான், ஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் அவர்கள்

19ஆவது ஆண்டு பரிசு அளிப்பு விழா 16-3-63



விழாத் தலைவர்: ஸ்ரீ காசிமடம் இளவரசு, வித்துவான், ஸ்ரீ முத்துக்குமார சுவாமித் தம்பிரான் அவர்கள்
பேசுபவர்: திரு. வ. இ. பாலசுப்பிரமணியம் M. A. (குடந்தை அரசினர் கல்லூரி-தமிழ்த்துறை)

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 14 || சோபகிருது-ஆ சித்திரைத்திங்கள் 1-ம்உ [14-4-63] || இதழ் 4

# சிதம்பரச் செய்யுட் கோவை

முதுபெரும் புலவர்

ஸ்ரீமத் சிவஞானத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

திருவெண்காடு.

[கட்டுரை 67]

## பதி ஞானசொரூபி

அராகத்தின் முதற்பகுதியில், சிவனைச் சிவஞானத்தால் தன் அறிவின் கண்ணே காண்டலொன்றே சிவப்பேற்றிற்குச் சிறந்த சாதனம் என்றும், அடுத்த பகுதியில், அளவைகட்கு எட்டாதவனுயினும், ஆகமப்ரமாணத்தால் (வேதாகமங்களில்) சிவபிரானது தடத்தலட்சணம், சொருபலட்சணம், எல்லாவற்றை யும் ஒதி அறிந்து, அநுமானப்ரமாணத்தால் நாடியறிந்து, அநு பூதிஞானத்தால் வேறற நின்றுணர்ந்து கொள்ளப் பெறுமவன்

(சிவன்என்றும், மற்றொருபகுதியில் சிவன்அருவும், அருவுருவும், உருவும் ஆகிய தடத்தமும் அம்மூன்றனையும் கடந்த சொருபமும் உடையவன் என்றும் கூறினர். திருவருள் கண்ணுகக் காண்பதே அநுபூதிக் காட்சி, ஆராய்ச்சியறிவு அளவைகளால் நிகழ்வது.

உலகம் செயற்படுபொருள். அவ்வுலகம்படும் செயல் மூன்று. அவை தோன்றல், இருத்தல், அழிதல் என்பன, அவை தோன்றத் தோற்றற்கும் இருக்கக் காத்தற்கும் அழிய அழித்தற்கும் ஒரு வினை முதல் (கர்த்தா)வேண்டும் என்று வழியளவை கொண்டு கடவுளுண்மையை நிலைநாட்டுகின்றன சைவ முதலாம் அளவில்லாச் சமயங்கள். உலகாயதர் முதலோர் அவ் வினை முதல் ஒன்று வேண்டா என்றும் இல்லை என்றும் கூறுவர்.

### உலகாயதர் கூற்று

1. காற்று ஏனைய மூன்று பூதங்களையும் காணுமாறு நிலை பெறுத்துத்தான் அவற்றின் எதிரில் நிலைபெறும்.

2. நெருப்பு ஏனைய மூன்று பூதங்களையும் அழித்துத் தான் அவற்றின் முன்னர் அழிவெய்தும்.

3. நீர் ஏனைய மூன்று பூதங்களையும் தோற்றித் தான் அவற்றின் முன்னிலையில் தோன்றும்.

4. மண் ஏனைய மூன்று பூதங்களினின்று நுகரப்படும் பயனைப் பயப்பித்துத் தான் அவற்றின் நேரில் பயன் படுதலையுடையது. இவ்வாறு செயற்படும் அந்நான்கு பொருட்கும் தாமே வினை முதல் ஆகித் தமக்குத்தாம் வேருய் நின்று செயலை நிகழ்த்துவதைக் கண்கூடாக அறிகின்ருேம். வேறு ஒருவன் இப்பூதங்கட்கு அந்நிலைபேறும் அழிவும், தோற்றமும், பயப்பித்தலும் ஆகிய செயல்களைச் செய்தல் இல்லை. அந்நான்கு பூதங்களும் தாமே இந்நாற்செயல்களையும் செய்து கொள்ளும், படைப்போன் வேறு இல்லை.

“நிலம்புனல் அனல் கால் காண நிறுத்திடும் அழிக்கும் ஆக்கும்
பலம்தரும்; ஒருவன் இங்குப் பண்ணிட வேண்டா”

என்பர் அவ்வுலகாயதர்.

சவுத்திராந்திகர் முதலோர் "கணபங்கம் (க்ஷணபங்கம்) ஆகிய எல்லாப்பொருள்களுள்ளும் முற்கணத்தில் தோன்றிய பொருள் பிற்கணத்தில் தோன்றும் பொருட்குச் சார்பாய் மேம் படுதலின், எல்லாப்பொருளும் விதைக் கேட்டில் முளைத்தோற் றம் போல அவ்வச் சார்பிலே தோன்றும். இதற்கு ஒரு வினை முதல் (கர்த்தா) வேண்டா. அவ்வினை முதல் இல்லை" என்பர்.

உள்ளதும் அன்று இல்லதும் அன்று. அநிர்வசனமாய் நிற்பதொருபொருள் தோன்றும் என்பர் மாத்திமிகர்.

சவுத்திராந்திகர் முதலோர் கூறும் இப்பொருட்கும் மாத்தி மிகர் முதலோர் கூறும் அநிர்வசனப் பொருட்கும் தோற்றம் கூடாமையின், பாரிசேடப்ரமாணத்தால், காரணம் காரியம் இரண்டும் உள்பொருளேயாய்க் காரணத்திலிருந்து காரியம் ஒரு வினை முதலில் வெளிப்பட்டுத் தோன்றும் என்பது மறுப்பு.

குயவன் சக்கரம் முதலிய துணைக்காரணங்களை மண் ஆகிய முதற்காரணத்தில் உய்ப்ப அதிலிருந்து குடம் சால்கரகம் முதலிய காரியமே வெளிப்பட்டுத் தோன்றும். ஆடை முதலிய காரியம் தோன்ரு. அதனுல், அவை இரண்டும் ஏலா. காரியப் படுவதொரு பொருள் உண்டுமாய் இல்லையுமாய் நிற்கும் இரண் டியல்பும் உடையது. இதற்கு ஒரு வினை முதல் (கடவுள்) வேண்டப்படுதல் இல்லை. இது சமணர் கொள்கை.

## இதற்கு மறுப்பு

உண்டும் இல்லையும் எனல் மாறுபட்டதன்மை. ஒரு பொரு ளில் மாறுபட்ட இரு தன்மை இருத்தல் கூடாது: இசையாது.

## அதற்குச் சமாதானம்

காரணவடிவாய் உண்டு. காரிய வடிவாயில்லை என்பதே அதற்குக் கருத்து.

## அச்சமாதானம் பொருந்தாமை

காரணத்திற்கும் காரியத்திற்கும் வேற்றுமையில்லை. காரணம் உள் பொருள் ஆயின், காரியமும் அதில் நுண்ணுருவாய் உண்டு. அந்நுண்ணிய உருவான காரியப் பொருள், அக் காரணப் பொருளிலிருந்து பருவடிவில் விளங்கித் தோன்றும்.

அத்தோற்றம் ஆகிய வினைக்கு முதல் ஒன்று உண்டு. அதுவே வினை முதல் ஆகிய கடவுள். அக்கடவுளால்தான், காரணத்திலிருந்து காரியம் விளங்கித் தோன்றும். கடவுள் இல்லை என்பாரும், உண்டு என்பாரும், உண்டில்லை என்பாரும், உள்ளதும் இல்லதும் அல்லது என்பாரும் ஆகப் பலதிறத்தார் உளர். அவரெல்லாரும் கடவுளின் சொருபமான ஞானத்தை அறியாதாரே.

“இலதுஎனின் உளது; உளதெனின் இலது; இலதுஉளது
அலதுஎனின் நினதுஉரு அறிபவர் எவர்?”

(1) இல்லை என்றால் உண்டு. (2) உண்டு என்றால் இல்லை. (3) இல்லதும் அன்று. உள்ளதும் அன்று என்றால் (இப்படிப் பல திறத்திற் கூறுவார் ஆயின்;) அறியாதார் என்றே கொள்ளப் படுவர் நினது உரு அறிபவர் எவர்? இவ்வினுவிற்கு விடை அப்பலதிறத்தருள் ஒருவரும் அறிந்தவரல்லர் என்பதாகும். சைவ சித்தாந்த ஞானச்செல்வர் உண்மை ஞானத்தால் முதல் வனை அறிந்தவர் என்றபடி,

— தாழிசை —

ஐந்தொழிலும் விளையாட்டே

சிவபிரான் கருவி கரணங்களால் எத்தொழிலும் செய்தல் வேண்டாதவன். அவன் நினைப்பு ஒன்றே எல்லாத் தொழிலையும் செய்ய வல்லது. படைப்பு முதலிய ஐந்தொழில்களையும் நினைப்பு (சங்கற்பம்) ஒன்றால்தான் செய்கின்றான். அதைச் சத்தி சங்கற்பம் என்பார். சிவசங்கற்பம் என்றாலும் சிவசத்தியின் சங்கற்பச் செயல் என்றே கருத்து. சிவன் விளையாட்டு என்பது வழக்கன்று; ‘அருள்விளையாட்டு என்பதே வழக்கு. ‘சிவன் செயல்’ அருட்செயல் இரண்டும் பொது நிலையில் வேறுபடாதன். ஆநந்ததானம் (இன்பக்கொடை) ஒன்றே சிவன் செயல், மற்ற யாவும் அருட்செயலே. இன்பம் கொடுத்தல் இறை’ என்றதன் உண்மை பேரின்பநுகர்வார்க்கு மட்டும் விளங்கும்.

‘ஐயா நீ ஆட்கொண்டருளும் விளையாட்டின் உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்’ காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி, வார்த்தை’ ‘முன்னவன் விளையாட்டு என்று மொழிதலும் ஆம்’

'ஏற்ற இவை அரனருளின் திருவிளையாட்டாக இயம்புவர்கள்' என்று, ஐந்தொழில் செய்தல் விளையாட்டு என்றது ஜங்கலப்பாரம் பொறுத்தல் சாத்தனுக்கு ஒரு விளையாட்டு என்பது போல, அவ்வளவு எளிதிற் செய்யும் ஆற்றல் (சக்தி) உடையன் என்னுங் கருத்தினதாகும். அதை அறியாமல் விளையாட்டு என்றதைக் கொண்டு வீண்தொழில் என்றல் சிறிதும் ஏலாது.

பசுகரணங்கள் சிவகரணமாகத் துன்னிய சாக்கிரத்தில் துரியாதீதம் தோன்ற முயன்று, பெற்றுச் சிவாநுபவம் சுவாநுபூதிகம் ஆக எய்திய பாக்கியவான்களும் கரணங்கடந்தவர்கள் எனின், முழுமுதற் கடவுள் கரணங்களை வேண்டற்பாலனே? நமக்கும் நம் இச்சா ஞானக் கிரியைகளே தலையான கரணங்கள். பதிக்கும் அவனுடைய இச்சா ஞானக்கிரியைகள் காரணமாகும். அம்மூன்ருக நம் மூன்று கரணமும் ஆதலே பசுகரணம் சிவகரணமாதல். இதை அறிதல் எல்லார்க்கும் நன்ருகும். ஆகவே, கரணத்தாற் படைத்தல் பதிக்கு எத்திறத்ததாகும்? இச்சையாற் படைத்தல் முதலியன பதிக்கு இயல்பு. அவ்விச்சாசத்திக்கு ஆதிசத்தியும் அவ்வாதிசத்திக்குப் பராசத்தியும் முதலாகும். அம்முதலான பராசத்திக்கும் அவனது கருணை என்னும் அபின்னுசத்தி முடிவானது. இதைத் தனிக் கட்டுரையில் அறிக. "கண்ணுதலான்றன் கருணைக்கன் காட்ட வந்தெய்தி எண்ணுதற் கெட்டா எழிலார் கழல் இறைஞ்சி" என்ற திருவாசகத்தாலும் அக்கருணையை உணரலாம். 'எண்ணுதற் கெட்டாக்கழல்' என்றது பசுகரணத்தால் எண்ண முடியாதது; சிவகரணத்தால் (அவனருளால்) எண்ண எட்டத்தகுவது என்றபடி. கரணம் சித்து அசித்து என்னும் இருதிறத்தன. கை கால் முதலியன அசித்துக்கரணம். அறிவு ஒன்றே சித்துக்கரணம். நமக்கு ஒரு தொழிலைச் செய்யக் கைகால் முதலியனவும் பல்வேறு கருவிப் பொருள்களும் தேவையாகும். கடவுளுக்கு அவனது இச்சை ஒன்றே அமையும், 'சொன்ன இத்தொழில்கள் என்ன காரணம் தோற்ற என்னில் முன்னவன் விளையாட்டு என்று மொழிதலும் ஆம்' என்றருளிய அருணந்திதேவ நாயனுர், அதனெடு நில்லாது, அவ்வைந்தொழிற் பயன் இன்ன என உணர்த்தியருளற் பொருட்டு, "உயிர்க்கு மன்னிய புத்திமுத்தி வழங்கலும் அருளால், முன்னே துன்னிய மலங்களெல்லாம் துடைப்பதும் சொல்லலாமே" என்ற உண்மையை

நோக்குதல் வேண்டும். அதாவது ஐந்தொழிலும் விளையாட்டு என்ற தன் கருத்தும் உலகர்களுக்குப் பெத்தகாலத்துச் சுவர்க்கம் முதலிய போகமும் பதமுத்திகளும் முத்திகாலத்து வீடுபேறும் கொடுத்தலாகிய பயனைப்பொருளாயுடையது என்பர். அவ்விரண்டும் தம்முள் முரணுமையால் உயிர்கள்பாற் சென்ற கருணையே ஆண்டைக்குக் காரணம். இத்திருவிருத்தத்தில் 'அருளால்' என்றதன் தாற்பரியம் வழங்கவும் துடைப்பவும் வைத்த அவ்வருள் காரணம் என்று மாதவச் சிவஞானயோகிகள் எழுதியருளிய விளக்கத்தைக் காண்க.

1. இளைப்பாற்றுவதே ஒடுக்கம். 2. வினை தொலையுமாற்றால் மலபரிபாகம் வரச்செய்வதே தோற்றம். 3. வினை தொலையுமாறு அதை நுகர்விப்பதே நிலை. 4. இருவினையொப்பு வருவித்து மலங்களை முதிர்விப்பதே மறைப்பு. 5. கட்டு அறவிடுவிப்பதே அருள். இந்நன்மைகளைப் பயனாகக் கொண்டவையே ஐந்தொழில்களுமாதலின், அவையெல்லாம் அருட்செயலே. மறத்தொழிலெனப் பழித்தல் கூடாது. அதைச் சிவஞானசித்தியார் உணர்த்துமாறு இது:-

"அழிப்பிளைப் பாற்றல்; ஆக்கம் அவ்வவர் கன்மம் எல்லாம்
கழித்திடல்; நுகரச் செய்தல் காப்பது; கன்ம வொப்பில்
தெழித்திடல் மலங்கள் எல்லாம் மறைப்பு; அருள்செய்திதானும்
பழிப்பொழி பந்தம் வீடு; பார்த்திடின் அருளே எல்லாம்"

உயிர்களின் பொருட்டே முதல்வன் ஐந்தொழில் செய்வன், அதனால் வீண் தொழில் ஆகாது. பித்தர் முதலோர் செய்யுந் தொழிலே வீண் தொழிலாம். நம் பிறப்பிலாப் பித்தன் செயல் பெரும் பயன் விளைக்கும் அரும்பெரும் புநிதத் தொழில். சிதம்பரச் செய்யுட்கோவையுள்.

'எத்தொழிலும் கரணங்கள் இறந்தநினக்கு இலை; ஐந்து
மெய்த்தொழில் செய்வதும் அடிகேள் விளையாட்டு நிமித்தமே.'

என்றதன் உண்மையே இதுகாறும் கூறப்பட்டது.

'கரணங்களெல்லாம் கடந்து நின்ற கறைமிடற்றன்' எத்தொழிலும் உயிர்களின் பொருட்டு விளையாட்டாகச் சங்கற்பத்தாற் செய்துவரும் உண்மையை "அவனே தானே யாகிய அந்நெறியேகனாகி இறைபணி நிற்"பாரே எளிதின் உணர்தல்கூடும்.

---

(வளரும்)

# நீதிநெறி விளக்கம்

## உரைநடையும், ஆங்கில மொழிபெயர்ப்பும்*

பாலகவி வயிநாகரம்,

திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,

தேவகோட்டை.

—∞✕∞—

[மலர் 14. இதழ் 3-ன் தொடர்ச்சி]

பணியப் படுவார் புறங்கடைய ராகத்
தணிவில் களிப்பினுல் தாழ்வார்க் — கணிய
திளேயாள் முயக்கெனினுஞ் சேய்த்தன்றே மூத்தாள்
புணர்முலேப் போகங் கொளல்.

தம்மாலே வணங்கி வரவேற்கத் தக்கவர்களாகிய சான்ரோர்கள் தமது தலேவாயிற் புறத்தில் வந்து இருக்கக் குறைவில்லாத செல்வச் செருக்கினுல் வந்த களிப்பால் அவர்களே வரவேற்கக் காலந் தாழ்ப்பவர்களுக்கு இளேயவளாகிய திருமகளது சேர்க்கை அப்போது நெருக்கமாயிருந்ததாலும் மூத்தவளாகிய மூதேவியினது துணேமுலேப்போகமாகிய சேர்க்கையை அடையும் காலம் தொலேவிலில்லே.

### The evil of not-respecting the superiors

Those who immoderately delight in the pride of their wealth, disregarding the great men, worthy of respect and make them wait at their gates, may be at present in the enjoyment of the goddess of fortune; but they may rest assured that the time when they will be in the embrace of her elder sister, the nemesis of misfortune, is not far off. 36

---

Translated by: Sri P. Mutharasu M.A.B.,T., Lecturer in Tamil, Sri K.G.S. Arts College, Arulnandi Nagar, Srivaikuntam.

கண்ணேக் கரும்பா நகைமுகமே நாண்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா — வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையார் அன்றே?
சலியாத கற்ப தரு.

தம்மிடத்திலே வந்து நிற்கின்ற இரவலரை அருள் கொண்டு பார்க்கின்ற பார்வையே அரும்பாகவும் முகத்தில் காட்டுகின்ற புன்முறுவலே அன்றலர்ந்த மலராகவும் இன் சொற்களால் பேசுகின்ற உண்மையே சுவையுள்ள காயாகவும், வள்ளன்மையோடு வழங்குகின்ற ஈகையே பழமாகவும் நன்மை மிகுந்த பண்பை உடையவர்கள், கொடுத்தலிற் சலிப்படையாத கற்பகத்தருவை ஒத்தவர்களல்லவா?

## Generosity

Are not they whose gentle glance is like the bud, their smiling countenance, the fresh - blown flower, their genuinely kind word, the fruit and their munificence being the delicious taste of the ripe fruit, the real unwearing heavenly *Kalpa Tree*? 37

வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
தூங்குங் களிறே துயருறு(து) — ஆங்கதுகொண்
டுரும் எறும்பிங் கொருகோடி உய்யுமால்
ஆருங் கிளையோ டயின்று.

தான் வாங்கி அருந்துகின்ற உணவு உருண்டையில் ஒரு சிறிய பகுதி வாயிலிருந்து தவறிக் கீழே விழுந்து விட்டால், அதற்காக அசைதலையுடைய யானை எவ்விதத் துன்பத்தையும் அடையாது. அவ்விடத்தில் சிந்திய அந்த உணவை உட்கொண்டு நிலத்திலே ஊர்ந்து திரிகின்ற ஒரு கோடி எறும்புகள் பொருந்திய தமது சுற்றத்தோடு பசியாறி இன்பமடையும்.

## On supporting the people around

The restless elephant will never care, if a portion of a ball of rice slips from its mouth, while it is being

fed; but a crore of crawling ants will subsist on that small quantity with all their kith and kin. (ie. It is no great loss to a king who remits a part of his revenue at times of distress; but that gesture will go a long way to help the suffering multitudinous masses) 38

மாகஞ் சிறுகக் குவித்து நிதிக்குவை
ஈகையின் ஏக்கழுத்தம் மிக்குடைய — மாகொல்
பகைமுகத்த வென்வேலான் பார்வையின் தீட்டும்
நகைமுகத்த நன்கு மதிப்பு.

போர்முகத்திலே யானைகளைக் கொல்லுகின்ற வெற்றிமிக்க வேற்படையையுடைய மன்னனது ஆகாயமும் சிறிதாகும்படி திரட்டப்பெற்ற செல்வக் குவியலின் ஈகையைக் காட்டிலும் புன் முறுவல் பூத்த முகத்தோடு பார்வையினாலே வெளிப்படுத்து கின்ற நன் மதிப்பு தலையெடுப்பை மிகுதியாக உடையதாகும்.

## The high regard of the king

The smile of approbation expressed in the sweet glance of a king whose bright spear inflicts death on all animals, has a more glorious prominence than the gift of a heap of treasure of such volume as to belittle even the sky. 39

கனைகணுத் தம்மடைந்தார்க் குற்றுழியும் மற்றோர்
வினைவுன்னி வெற்றுடம்பு தாங்கார்; — தளர்நடைய
தூனுடம் பென்று புகழுடம் போம்புதற்கே
தானுடம் பட்டார்கள் தாம்.

ஊனாலாகிய இவ்வுடம்பு நோய் மூப்பு முதலியவற்றால் தளர்ச்சியை அடைந்து அழியும் தன்மையை உடையதென் றறிந்து அஃதிலாததாகிய புகழுடம்பையே பாதுகாத்துக் கொள்ளுதற்கு உறுதி கொண்ட பெரியோர்கள் தாங்கும் இட

மெனத் தம்மை எண்ணித் தம்பால் வந்தடைந்தவர்களுக்குச் சிறிதளவு துன்பம் வந்த இடத்தும் தமதுஉடம்பாற் பெறத்தக்க மற்றைச் சிறு பயன்களை எண்ணிப் பயனற்ற தமது உடம்பைத் தாங்கிவாழ நினைக்க மாட்டார்கள்.

### The immortal body of fame

Those who have determined to cherish the body of fame, knowing the frailty of the body of flesh, will never hesitate to sacrifice it, should anything happen to such of those as are under their protection with the fond hope of any future profit arising to them. 40

(தொடரும்)

---

ராகம்: சண்முகப்பிரியா: தாளம்: ஆதி

(வள்ளிநாயகனே என்ற மெட்டு)

பல்லவி

செந்தில் நாயகனே, திருச்செந்தில்
நாயகனே, நீயேதுணையென நம்பினேன்
பராபரனே — குகனே (திருச்செந்தில்)

அநுபல்லவி

தேசோன் மயமான — செவ்னிற மேனியனே
திருமுகம் ஆறுடைய சிவசுப்ர மண்யனே (செந்தில்)

சரணம்

மயூராசனமும் மாதர் இருபக்கமும்
மாயரை வதைத்திட்ட வெற்றிவடிவேலும்
குமரகுருபரனாய்த் தோன்றிய சண்முகா
குழந்தை எந்தனுக்கருள் புரிந்திட வருவாய் (செந்தில்)

இயற்றியவர்,
N. கோமதியம்மாள்,
ஸ்ரீவைகுண்டம்.

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 14, இதழ் 3-ன் தொடர்ச்சி]

## II

## THIRUNAVUKKARASU SWAMI

(More commonly referred to as APPARSWAMI)

29. நீதியால்வாழமாட்டேனித்தலுந்தூயேனல்லேன்
ஓதியுமுணரமாட்டேனுன்னையுள்வைக்கமாட்டேன்
சோதியேசுடரேயுன்றன்றூமலர்ப்பாதங்காண்பான்
ஆதியேயலைந்துபோனேனதிகைவீரட்டனாரே.

It is often said, not without truth, that Hinduism fails to create a strong sense of sin. But there are great exceptions: witness the following verses, samples of many, taken from a hymn which trembles with feeling. The author is sunk in sin. Or he has been like a swing, flying first toward evil and then towards God; but now, joy! the cord has snapped, and he lies fixed at his Lord's feet. Yet the old mood returns; his soul is bound and drugged with sleep, and life has no joys to offer unless God will save.

### THE SOUL'S BITTER CRY

29. In right I have no power to live,
Day after day I'm stained with sin;
I read, but do not understand;
I hold Thee not my heart within.
O light, O flame, O first of all,
I wandered far that I might see,
Athihai Virattanam's Lord,
Thy flower - like feet of purity.

---

உ

திருச்செந்திலாண்டவன் துணை.

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு



[புதிய மலிவுப் பதிப்பு — 1961]

புதிய பதிப்பு பிரதி ஒன்றின் விலை ரு. 3-50 ந. பை. ஆகக் குறைக்கப்பட்டிருக்கிறது.

(முந்தின பதிப்பு பிரதி ஒன்றின் விலை. ரு. 6/-)

(தபால் கட்டணம் வேறு)

768 பக்கங்கள் கொண்டது. (128 + 621 + 19) உயர்ந்தரக வெள்ளைத்தாளில் பெரிய எழுத்தில் தெளிவாக அச்சிடப் பெற்றது.

டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் எழுதிய குறிப்புரை, ஆராய்ச்சி, முதலியவற்றுடன் கூடியது.

ஒரே சமயத்தில் 5 பிரதிகளும் அதற்குமேலும் வாங்குபவர்களுக்கும் 20% கழிவு உண்டு.

இதன் விற்பனைத் தொகை ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்தைச் சாரும்.

கிடைக்குமிடம்:-

ஸ்ரீ T. M. குமரகுருபரன் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
வழக்கறிஞர்
ஸ்ரீவைகுண்டம் P. O. :: (திருநெல்வேலி மாவட்டம்)

# திருவருட் பயன்

பண்டித வித்துவான், சைவப்புலவர், சித்தாந்த நன்மணி,

திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள்,

தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.



## நூலாசிரியர் வரலாறு :-

இந்நூலை அருளியவர் உமாபதி சிவாச்சாரியார் ஆவர். தில்லையம்பதியினர். தில்லைவாழந்தணர் மரபினர். அம்பல வாணனைத் தீண்டி வழிபடும் பேற்றினர். வடமொழியிலும் தமிழ் மொழியிலும் வல்லுநர். கோயில் புராணம், திருமுறைகண்ட புராணம், திருத்தொண்டர் புராண வரலாறு, திருத்தொண்டர் புராண சாரம், திருப்பதிகக் கோவை, சேக்கிழார் புராணம், ஆகிய தமிழ் நூல்களையும், பௌட்கராகமத்துக்கு வியாக்கி யானத்தை வட மொழியிலும் செய்தருளியவர்.

அக்காலத்துச் சோழ அரசரால் இவரது அருமையும் பெரு மையும் கருதி இவருக்கு முத்துச் சிவிகை, மேள வாத்தியம், பகல் தீவட்டி முதலிய விருதுகள் அளிக்கப்பட்டன. நாள் தொறும் அம்பலவாணனைப் பூசித்து விருதுகளுடன் சிவிகை யூர்ந்து வருகின்றவர், வைகாசித் திங்களில் ஒருநாள் நண் பகலில் அங்ஙனம் வந்தார். அதுகாலை அருள்நலம் முதிர்ந்த மறைஞான சம்பந்தர், தமது மாணவர்களுக்குத் திண்ணை யொன்றில் இருந்து கொண்டு பாடங் கற்பித்து வந்தனர். அம் மாணவர்களுள் ஒருவர் உமாபதி சிவாச்சாரியாரின் வருகையை அறிவிக்க, அவர் 'பட்ட கட்டையில் பகற்குருடன் போகின்றான் பாருங்கள்' எனக் கூறினர். உமாபதி சிவாச்சாரியாரின் திருச் செவியில் இவ்வுரை கேட்டது. ஞானாசிரியனைப் பெறவேண்டு மென்றிருந்த அவரது திருவுள்ளத்திற்கு இவ்வுரை ஞானவுரை

யாயிற்று. சிவிகையிலிருந்து இறங்கினர். ஞானவள்ளலாகிய மறைஞானசம்பந்தரை வழிபட்டார். அவரும் இவரது அருள் முதிர்வை நோக்கி, அருளுபதேசம் செய்து, தமது மாணவராக ஏற்றுக் கொண்டனர். தமது மாணவரின் அருட்கனிவை உலகினர்க்கு உணர்த்தக் கருதிய மறைஞான சம்பந்தர் ஒருநாள் செங்குந்தர் வீதியை அடைய, அவரது மாணவரும் உடன் சென்றூர். ஆடைகளுக்காக வைக்கப் பட்டிருந்த கஞ்சியை ஒருவரிடம் வாங்கியுண்டார் ஆசிரியர். அங்ஙனம் உண்ணும் பொழுது அவர்தம் முழங்கை வழிவந்த கஞ்சியை உமாபதி சிவாச்சாரியார் உண்டார். இங்ஙனம் நிகழ்ந்த அருஞ்செயலைக் கண்டு அனைவரும் வியந்தனர்.

மறைஞானசம்பந்தர் தமது மாணவருக்குச் சித்தாந்த நுண் பொருள்களை நன்கு விளக்கிவந்தனர். அதன் பயனாக எழுந்தனவே இத் திருவருட்பயன் முதலாகவுள்ள எட்டு ஞானநூல்களாகும். அவை சித்தாந்த அட்டகம் எனப் பெயர்பெறும். அவையாவன :- 1. சிவப்பிரகாசம், 2. திருவருட் பயன், 3. வினா வெண்பா, 4. போற்றிப்பஃறொடை, 5. கொடிக்கவி, 6. நெஞ்சு விடுதூது, 7. உண்மைநெறிவிளக்கம், 8. சங்கற்பநிராகரணம். இவற்றுள் உண்மைநெறிவிளக்கம் இவ்வாசிரியரால் செய்யப் பட்டதன்று என்று கூறுவர் திரு. எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை, அவர்கள், M. A., L. T.

சுவேதவர்மன் என்னும் அரசன் வெண்குட்டத்தால் வருந்த, புலிக்கால் முனிவர் இந்நோய் தில்லைப் பதியில் சிவகங்கையில் நீராடி அம்பலவாணனை வழிபடின் நீங்கும் என, அம்மன்னனும் தில்லைக்கு அண்மையில் ஒரு நகரத்தினை ஏற்படுத்திக்கொண்டு, அங்கு தங்கினன். பின் அம்முனிவரின் ஆணைப்படி

'தீர்த்தம் என்பது சிவகங்கையே
ஏத்தருந்தலம் எழிற்புலியூரே
மூர்த்தி யம்பலக் கூத்தனது உருவே'

எனச் சிறப்பிக்கப்பெறும் தில்லையம்பதியில் நாளும் வந்து வழி பட அந்நோய் நீங்கிற்று. அவன் தங்கிய அந்நகரம் கொற்ற வன்குடி எனப் பெயரும் பெற்றது. தமது ஞானாசிரியராகிய

மறைஞான சம்பந்தரின் முழங்கைவழிவந்த கஞ்சியை உமாபதி சிவாச்சாரியார் உண்டதனுல், ஏனைய தில்லை வாழந்தணர்கள் அவரை ஒதுக்கிவிட, அதுமுதல் உமாபதி சிவாச்சாரியார் தில்லைப் பகுதியில் வதியாது, இக்கொற்றவன் குடியில் வாழ்ந்து வரலானுர். அதனுல் இவருக்குக் கொற்றவன்குடி முதலியார் என்று வேறொரு பெயரும் உண்டு.

அற்புதச் செயல்கள் :-

1. சேரமான் பெருமாள் நாயனுருக்கு இறைவன் பாண பத்திரர் பொருட்டுத் திருமுகப் பாசுரம் அளித்தது போல, அம்பலவாணரும் பெற்ருன் சாம்பான் என்பாருக்காக இவருக்குத் திருமுகப் பாசுரம் ஒன்று அளித்து அவருக்கு முத்தி கொடுக்கு மாறு செய்தார். அத்திருமுகம் வருமாறு :-

"அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதியகைச் சீட்டு — படியின்மிசைப்
பெத்தான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை."

2. பின்பு அப்பெற்ருன் சாம்பானுடைய மனைவியும் அரசனும் காண ஒரு முள்ளிச் செடிக்கு முத்தி கொடுத்தார்.

3. மார்கழித் திருநாளிலே ஏருதுநின்ற கொடியை கொடிக் கவி என்னும் நூலை அருளிச் செய்து அதனை ஏற்றுவித்தார்.

காலம்:- கி. பி. 14ம் நூற்ருண்டின் முதற்பகுதி. இதனை அவர் அருளிய சங்கற்ப நிராகரணத்துள் "ஏழஞ்சிறுநூறு எடுத்த ஆயிரம், வாழுநற் சகனம் மருவா நிற்ப" என்னும் அடிகளால் அறியலாம்.

திருவருட் பயன்:- திருவருளைப் பற்றியும் அதனது பயனைப் பற்றியும் விளக்கமாக இந்நூல் கூறுதலின் இது 'திருவருட் பயன்' என்னும் பெயர் பெற்றது. குறள் வெண்பா யாப்பில் அமைந்தது. காப்புச் செய்யுளுடன் 101 குறட்பாக்களை யுடையது. நீதிநூலுள் சுருக்கமும் விளக்கவும் மிக்க நூல் திருக்குறள் ஆதல்போல சாத்திர நூலுள் சுருக்கமும் விளக்கமும் மிக்க நூல் இதுவாகும். இது பத்து அதிகாரங்

களைக் கொண்டது. ஒவ்வொரு அதிகாரமும் பத்துக் குறட் பாக்களையுடையது. முன்னைய ஐந்து அதிகாரமும் பொது எனவும், பின்னைய ஐந்ததிகாரமும் சிறப்பு எனவும் கூறுவர். முன்னைய ஐந்தும் திருவருளைப்பற்றிக் கூறும். பின்னைய ஐந்தும் அதன் பயனைப் பற்றிக் கூறும்.

காப்பு:-

'நற்குஞ் சரக்கன்று நண்ணில் கலைஞானம்
கற்கும் சரக்கன்று காண்'

(தெளிவுரை): அருள் பொழியும் திருமுகமாகிய யானை முகத்தினையும், என்றும் அழியா இளமையினையும் உடைய விநாயகப் பெருமானை ஒருவர் மனம், மொழி, மெய்களால் வழி படுவாராயின், அவருக்கு மெய்ப்பொருள் யாவும் வருந்திக் கற்கும் பொருளல்ல என்பதாம். எனவே அவை யனைத்தும் எளிதின் தாமே அவர்பால் வந்தடையும் என்பது கருத்து.

உலகத்து யானைகள் அறிந்தறிந்தும் பாகனையே கொல் லும்; ஆனால் இவ்யானையோ உயிர்களின் வினைகளைக் கொன்று கருணை வெள்ளம் பொழியும் என்பார் 'நற் குஞ்சரக்கன்று' என்றார்.

(தொடரும்)

# சிலப்பதிகார ஓரங்க நாடகம்

பன்மொழிப் புலவர், பல்கலைச் செல்வர்,

உயர்திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர் அவர்கள்,

M. A., B. L., M. O. L.,

தமிழ்க்கலை, மொழிஇயல் துறைத் தலைவர்,

அண்ணுமலைப் பல்கலைக்கழகம்.



[மலர் 14, இதழ் 3-ன் தொடர்ச்சி]

## கொலைக்களக் காதை

### மூன்ரும் காட்சி

### I

கொலைக் களக் காதையின் மூன்ருவது காட்சி அரண்மனையில் நிகழ்கிறது. அதுவும் இதுவரை அறிந்திராத ஒரு சூழ்நிலையில் முகிழ்க்கிறது. அரண்மனையின் அந்தப் புரத்தில் பாண்டிமாதேவி தன் மாளிகையின் வாயிலைப் பெருங்காவலோடு அமைத்து, மனவருத்தமும் சீற்றமும் பொங்க உள்ளே இருக்கின்ருள். அரசன் மேல் எழுந்த ஊடல் காரணமாகத் தலைவி இந்தத் துன்பநிலையில் மனம் எரிந்து நிற்கின்ருள்.

a.

இதற்குக் காரணமும் பாத்திரங்களின் பேச்சாலன்றிக் காட்சிக் குறிப்பு வாயிலாகவே ஆசிரியர் விளக்குகிருர். இதுவரையிலும் காப்பியத்தில் ஆசிரியர் படைத்துவந்த சமுதாயச் சூழ்நிலையை மனத்திற்கொண்டே இக்குறிப்பின் ஆழத்தை உணர்தல் வேண்டும். புகார்க் காண்டத்தில் அரங்கேற்றம் நிகழ்ந்தது. அதுவும் அரண்மனையில் நிகழ்ந்தது. அரசன் பாராட்டுகின்ற கலைபெற்ற பரிசில் என்ன? அக்கலையரசி 1008 கழஞ்சு பொன் பெற்று ஒரு சிறந்த பரத்தையாக வாழ்வதேதான். கலையின் வளர்ச்சி இவ்வாறு சமுதாயத்தில்

புண்ணுய்ப் புரையோடியதைக் கண்டோம். கலை அரசியர், கற்பு அரசியர் ஆகிய இருவருக்கும் இடையே காதல் முரண்படுகின்றது. இந்த முரண்பாட்டுச் சமுதாய நிலை தமிழகத்தில் உருவாகி உள்ளதைக் கண்டோம். ஆனால் அங்கே கலை அரசியே கற்பு அரசியாகவும் காட்சி அளித்தாள். எனினும் மற்ருேர் கற்பரசியின் வாழ்வு அங்கிருப்பதற்கில்லை; ஆதலின் அக்கண்ணகி மதுரை நோக்கி நம்மோடு வரக் கண்டோம். மதுரையும் பரத்தையர் பெருமையாகச் சிறந்து இருப்பதனையே கோவலன் தன்னையும் அறியாமல் கண்டு பாராட்டியதையும் உணர்ந்தோம். புரையோடிய இந்த நோயின் முடிவுநிலையை இப்போது காண்கிருேம்.

அரசியும், அரசனும் அரியணையில் வீற்றிருக்கிருர்கள். எதிரே கூடலில் சிறந்த ஆடல் மகளிரின் கூத்தும் பாடலும் நிகழ்கின்றன. இத்தகைய கூடல் மகளிர் கொள்ளும் கோலத்தின் சிறப்பை மாதரி முன்பு குறிப்பிட்டாள். அக்கோலத்தைப் பழிப்பது போல உள்ளது கண்ணகியின் இயற்கை அழகு என்றும் அவள் வாய்விட்டுக் கூறிவிட்டாள். அவ்வாறு எளிய வாழ்வில் உள்ளவர்களே அந்த உண்மையைக் காணமுடியும்போலும். நீதி பிறழா நெஞ்சம் உடைய அரசனும் அதனைக் காணமுடியவில்லை போலும். கற்புக்கும் கலைக்கும் நிகழ்கின்ற போராட்டத்தை அரசன் உணரவில்லை. கலையில் ஈடுபாடு என்பது இந்தக் கலை அரசிகள் செய்து கொள்ளும் ஒப்பனைகளால் ஒளிரும் அவர்களுடைய வடிவழகில் கொள்ளும் ஈடுபாடாகவே தொடங்குகிறது; அவ்வழியே முதலில் மக்கள் உள்ளத்தைப் பறிக்கின்றது. அவ்வாறுதான் அரசன் உள்ளத்தையும் இப்போது பறிக்கின்றது, அந்த ஈடுபாடு. கூடல் மகளிர் ஆடல் தோற்றம் இவ்வாறு காவலன் உள்ளம் கவர்ந்தது என்பதை அருகிலிருந்த அரசி அறிந்துவிடுகின்ருள். அவர்கள் பாடிய பாடற்பகுதியின் இலக்கியச் சுவையும், பண்ணின் பல சுவைகளும் ஆடலோடு ஒருங்கு இயைந்து அவர்கள் தோற்றத்தில் இருந்த ஈடுபாட்டை வளரச் செய்கின்றன. அருகே அரசி இருக்கின்ருள் என்பதையும் அவை மறக்கச் செய்கின்றன. இந்த நிலையிலே நாம் காண்கின்ருேம்.

b.

அவள் உள்ளம் வாடி, உடல் வாடி, முகம் வாடி வருந்தும் வருத்தத்தை நாம் காண்கிறோம்; அரசன் காணவில்லை. ஊடல் உள்ளத்தோடு அரசியார் அவன் அருகே இருக்க முடியவில்லை. ஆகையால் தன்னுடைய நிலை அனைத்தையும் மனத்திற் குள்ளேயே மறைத்து வைக்கின்றாள். 'பொறுக்க முடியாத தலை நோய் தனக்கு' எனப் பொய்க் காரணம் கூறுகின்றாள்; அரியணையைவிட்டுக் கீழே இறங்கிப் போய்விடுகின்றாள். அரசி இல்லாமல் தான் இருக்கின்ற நிலையை அரசன் அறிகின்றான்; உண்மையை உணர்ந்து கொள்கின்றான். தன்னுடைய குல முதல் தேவி இவ்வாறு கொலு மண்டப அரசியலில் கூடி நில் லாது ஏகிய ஊடலை உள்ளவாறு உணர்கின்றான். எனவே இவனும் எழுகின்றான்—அவளைப் பின் தொடர்ந்து. திடீரென அரசனும் அரசியும் நீங்கக் கொலுச்சபை எதிர்பாராத வகையில் கலைகிறது. இந்த அவல அரசியல் நிகழ்ச்சியின் ஆழத்தை நாம் எண்ணிப் பார்த்தல் வேண்டும்.

II a.

அரசன் அரசியின் மாளிகையை நோக்கிச் செல்கின்றான். எப்படியேனும் தன் குல முதல் தேவியின் ஊடலைத் தீர்ப்பதே இப்போது அவனுடைய நோக்கம். கொலுவோ, மந்திரச் சுற் றமோ, ஆடலோ, பாடலோ ஒன்றும் அவனுக்குத் தோன்ற வில்லை. கோப்பெருந்தேவியின் கோயிலை நோக்கிச் செல்லுகின் றானுதலின் 'சிந்தரி நெடுங்கண் சிலதியர்' மட்டுமே அவனுடன் வருகின்றனர். மாளிகையின் அருகே வந்து விடுகிறான் அரசன்.

b.

அதன் வாயிலின் அருகில், வருகின்ற உள்ளத் துடிப்போடு உள்ள அரசனது எதிரே பொற்கொல்லன் வந்து அடியில் விழ் கின்றான். சில நேரம் விழ்ந்தே கிடக்கின்றான்; எழுந்த பின் னும் தாழ்ந்து நின்று பலபலவாருகப் பாண்டியனைப் போற்று கின்றான்; 'விழ்ந்து கிடந்து, தாழ்ந்து பல ஏத்தி' என்று இவனைப் பற்றி அடிகள் கூறுவதில் அவனுடைய வஞ்சக நிலையை-முடிவுவேறிலாது தொடர்கின்ற வஞ்சக நிலையை ஆசிரியர் குறிப்பிடக் காண்கிறோம்.

c

பொற்கொல்லன் பேசுகிறுன். திறம்பட முன் கூட்டியே எண்ணிப் பேசுகின்றுன் போலும். சொல்ல வந்தவற்றை முதலி லேயே குறிப்பிடாமல் எதிர்பாராத ஒரு வியப்பு நிலையை உரு வாக்குகிறுன். தான் சொல்லியதை நம்புவதற்கு வேண்டிய அச் சூழ்நிலையை நிலைநாட்டி விடுகின்றுன். 'கள்வன்: கையில் கன்னம் இல்லை; கவைக்கோல் இல்லை; அவனுக்குக் கைவந்து அவனேடு ஒன்ருகிவிட்ட மந்திரம்தான் துணை. இதனையே பெருந்துணையாகக் கொண்டு அரண்மனைக்குள் புகுந்தான். வாயிலாளரை எல்லாம் அம்மந்திரத்தால் மயங்கும்படிச் செய் தான்; பின் தூங்கும்படியும் செய்தான். அந்த நிலையில் அரண் மனைக்கே சிறப்பாக விளங்கிய சிலம்பினை எடுத்துக் கொண் டான். என்னே! அக்கள்வன் செயல்!' என்பது தோன்றப் பேசுகிறுன். இவை எல்லாம் அவன் பேசும் பேச்சின் குறிப்புக் கள். 'அத்தகைய கள்வன் இப்போது அவனே வந்து என் னிடத்தில் அகப்பட்டுக் கொண்டான்', என்று கூறி மேலும் பெரும் வியப்பை ஊட்ட முயலுகிறுன். 'ஒளிமிக்க அந்த மதுரைப் பேர் ஊரில் எங்கும் நிறைந்த காவலாளரையும் தப்ப முடியும் போலும்'. அவர்கள் கண்ணுக்கு மறைந்த இக்கள்வன் என் விட்டில் வந்திருக்கின்றுன். என்னுடைய இழிந்த சிறு குடிலில் உள்ளான்' என்கிறுன். விலைபேச வந்தான் என்பது குறிப்பு. எல்லோரையும் மயக்கும் கள்வன் இப்படித் தானே வந்து அகப்பட்டுவிட்டானே என்ற வியப்பும் இதில் உண்டு. அரசைத் தப்ப முடியுமா என்ற குறிப்பும் இருக்கலாம்.

d

எதிர்பாராத வகையில் பொற்கொல்லனுடைய எண்ணம் பலிக்கின்றது. ஊடலைத் தீர்க்கும் துடிதுடிப்பில் போய்க் கொண்டிருந்த அரசனுக்கோ கொல்லனது வஞ்சம் ஒன்றும் தெரியவில்லை. ஊடலைத் தீர்க்கும் ஒரு வழியாக அரசியின் சிலம்பு கிடைத்த செய்தியைச் சொல்லலாம் என்று கூட அரசனுக்குத் தோன்றுகிறது போலும். கள்ளனைக் கையும் களவுமாகப் பிடித்துக் கொண்டுவந்து பின் தீர ஆராய்ந்து, தீர்ப்புச் சொல்ல வேண்டிய முறையினையும் அரசன் இந்த

நிலையில் தேரான் ஆகின்றான். "தேரானாகி" என்று இங்கே ஆசிரியர் குறிக்கின்றார். கண்ணகியும் வழக்குரை காதையில் 'தேராமன்னா' என்றே அரசனை விளிக்கின்றாள்.

e

இவ்வாறு அவன் தேராது இருந்ததற்குக் காரணம் அவன் இருந்த சூழ்நிலை என்பது தெளிவு. இங்கே வாழ்வு எல்லாம் ஊழோடு நிகழ்கின்ற போராட்டம் ஆதலின் அந்த ஊழ் முற்றித் தன் பயனைத் தருகின்ற காலம் இது என்கிறார் இளங்கோ அடிகள். 'வினைவிளை காலம் ஆதலின், யாவதும் சினைஅலர் வேம்பன் தேரான்' என்கிறார். பாண்டி நாட்டின் அரசியல் சின்னமாக விளங்கும் வேப்பமாலை தோன்றினாலும் அதன் சிறந்த அரசியல் தோன்றவில்லை என்பதைக் குறிப்பார் போல் 'சினை அலர் வேம்பன்' என்று பாண்டியனைச் சுட்டு கின்றார் புலவர்.

f

'வேம்பன்' என்பதற்கு ஒரு பொருள் கூறுகின்றார் அடியார்க்கு நல்லார். 'திருக்கோவையாரில் 'கொன்றையன்' என்றால் 'கொன்றையின் தன்மை உடையவன்' என்ற பொருள் தோன்றுவதுபோல இங்கே 'வேம்பன்' என்பதற்கு 'வேம்பின் தன்மை உடையவன்' என்றும் பொருள் கொள்ளலாம் போலும். அப்போதுதான் அரசனது மனக் கசப்பான நிலை விளங்கும்.

g

விரைந்து சென்று ஊடல் தீர்க்க விரும்பியவன், தன் அரசியல் நிலையைத் தேராது விரைகின்றான். ஊர் காப்பா ளரைக் கூவி அழைக்கின்றான். 'கூவுதல்' என்ற சொல்லும் அவனுடைய உள்ளத் துடிப்பையே காட்டுகிறது. மந்திரச் சுற்றத்தை அடையாது தானே ஊர் காப்பாளரிடம் பேசு கின்றான். அவன் உள்ளத்தின் துடிப்பு அரசியைப் பற்றியது என்பது அவன் பேசும் முதற்பேச்சிலேயே விளங்குகிறது. அவள் தாழ்ந்த பூமாலை போல வாடி, முகம் தாழ்ந்து சென்ற நிலை அவன் உள்ளத்தில் பதிந்துள்ளது என்பது இப்போது விளங்குகிறது. என் 'தாழ்பூங் கோதை தன்காற் சிலம்பு'

என்று பேசத் தொடங்குகிறான். பொற்கொல்லன் கள்வனைப் பற்றிப் பேசிய பேச்சு அவன் உள்ளத்தில் பதிந்து விடுகிறது என்பதும் புலனாகிறது. இல்லையானால் 'களவில் தழும்பேறிய கள்வன்' எனப்பொற்கொல்லன் கூறியதை எல்லாம் 'கன்றிய கள்வன்' என்ற ஒரு சிறு சொற்றொடரின் அமைத்துக் கூறுவானா? இவ்வாறு தன் அரசியலில் ஒரு கள்வன் நேர்ந்தானே என்ற எரிவு ஒரு புறம்; அரசியின் சிலம்பையே திருடினானே என்ற சீற்றம் ஒரு புறம்; இவற்றோடு அரசியை மகிழ்விக்க வேண்டும் என்ற துடிதுடிப்பு ஒரு புறம்: இவை எல்லாம் சேர்ந்து இவனைப் பேசச் செய்கின்றன. 'ஈங்கு என் தாழ் பூங்கோதை தன் காற் சிலம்பு கன்றிய கள்வன் கையதாகில் கொன்றச் சிலம்பு கொணர்க ஈங்கு' என்கிறான். ஈங்கு, என்று கூறுகின்ற அரசனது மனநிலையை நாம் உணர்தல் வேண்டும்.

h

அடியார்க்கு நல்லார் அரசனுடைய நிலையை விளக்குகின்றார். 'சிலம்பு.......கள்வன் உடைய கையகத்தாயின்' அவனைக் கொல்ல அச்சிலம்போடு இங்குக் கொணர்க' எனக் கருதியவன் (அரசன்) வினை விளைகின்ற காலமாதலாலே, இதனைச் சிறிதும் தேரானாய், தேவி கூடாது ஏக, சுற்றம் நீங்கிச் சிலதியரோடு கோயில் நோக்கிக் காமபரவசனாய் அவள் கடையிடத்தான் ஆதலானே அவனைக் கொன்று அச்சிலம்பை இவள் ஊடல் தீர்த்ததற்கு உதவியாக இவ்விடத்தே கொணர்விராக' என்று சொல்ல என்க'.

i

இவ்வாறு அரசன் தேராது பேசினாலும் கூட, அரசியலில் பழகியவன் ஆதலின், அவன் பேச்சை ஆழ்ந்து நோக்கினால் தவறில்லாதது போலத் தோன்றும் என்ற குறிப்பையும் அடியார்க்கு நல்லார் விளக்குகின்றார்! கொன்று, கொல்ல எனத் திரிப்பினும் அமையும். 'இனி என் கோதைதன் காற்சிலம்பு அடிப்பட்ட கள்வன் கையதாயின் 'கோன்று கொணர்க' எனினும் தன்கண் கொடுங்கோன்மை இன்மை உணர்க'. ஆனால் 'தேரானாகி' என்று கூறிய குறிப்பையும் நாம் உணர்தல் வேண்டும். கள்வன் கையது அரசியின் காற்சிலம்பே என்பதை

ஆராய்ந்து முடிவு செய்ய வேண்டியவர்கள் ஊர்காப்பாளர் அல்லர். ஆதலின் அவர்களிடம் அப்பொறுப்பை விடுவது அரசியல் ஆகாது. கலங்கி நின்ற சூழ்நிலையில் எழுந்த ஒரு கோளாறு ஆகும் இது. 'கொல்லச் சிலம்பு கொணர்க' எனக் கூறவேண்டியவன், 'கொன்றச் சிலம்பு கொணர்க' என்று கூறி விடுகின்ருன். லகரத்திற்குப் பதிலாக றகரம் வருவதால் எழுகின்ற கொலேயே இது. ஓரசையில் பெருந்தீங்கை விளே விக்கின்ற ஊழின் திறத்தை உணர்ந்தே வினேவிளே காலம் என்கிருர் ஆசிரியர். இதுவும் பொச்சாப்பின் வழியே ஊழ் நம்மை ஏமாற்றும் ஏமாற்றமே ஆகும்.

இன்று யாழ்ப்பாணத்திலே ஒலிப்பதுபோல முற்காலத்தே தமிழகம் எங்கும் 'ற' 'ட, போல், ஆனல் சிறிது மாறுதலோடு (ஆங்கில 't' போல்) ஒலிக்கப்பெற்றது. அதனல் 'கொன்று' என்பதும் 'கொண்டு' என்பதும் ஒருவகையால் சிறிது ஒற்றுமை உடையன எனலாம். எனவே கள்வனே உயிரிலா அஃறிணைப் பொருள் போலப் பிடித்துக்கொண்டு வரவேண்டும்; அவன் திருடிய சிலம்போடு கையும் களவுமாகக் கொணர்தல் வேண்டும் என்ற பொருளில் 'கொண்டு அச்சிலம்பு கொணர்க' என்றுகூற வேண்டிய அரசன் பொச்சப்பால் வினேவிளே காலம் ஆதலின் டகரத்தை றகரமாகப் பிறழ ஒலித்துக் 'கொன்றச் சிலம்பு கொணர்க' என்ருன் என என்னுடைய மாணவர் ஒருவர் விளக்கு கிருர். (இ. அண்ணுமலே, அண்ணுமலேப் பல்கலேக் கழகம்.)

## III

இந்த அரசன் பேச்சினேக் கேட்டவுடன் தான் எண்ணியது முடிந்து விட்டதாக மகிழ்கின்ருன் கொல்லன். காவலனே கோவலனேக் கொல்ல ஏவினுன் அல்லவா? உண்மையில் கொலேயாளி கொல்லனே என்ற கருத்தினுலே 'கருந்தொழிற் கொல்லன்' என்று புலவர் குறிக்கின்ருர். 'ஏவல் உள்ளம்' என்று கொல்லனது உள்ளத்தைக் குறிக்கின்ருர் ஆசிரியர். கொலேத் தொழிலின் மேல் ஏவப்பெற்ற உள்ளம் என்றும் பொருள் கொள்ளலாம். அவன் எண்ணிய கொலே எண்ணத்தை அரசன் மேலே போடத்தக்க வகையிலன்றே சூழ்நிலே உருக்

(தொடர்ச்சி 227-ம் பக்கம் பார்க்கவும்

# கொங்கு நாட்டுப் புலவர் பெருமக்களின் வரலாறு

வித்துவான், திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்கள்,
ஆராய்ச்சியாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

## 1. திருச்செங்கோடு, அ. முத்துசாமிக்கோனார்

**ஊர் :—**

இவர் கொங்கு நாட்டுப் பாடல்பெற்ற தலங்களில் ஒன்றும், இறைவன் உமையொரு பாகனாகிய திருவுருவோடு எழுந்தருளியிருப்பதும், திருஞான சம்பந்தப் பெருமான் இங் கெழுந்தருளிய போது திருக்கூட்டத்தார்க்கு நளிர் சுரம் உற்றதை யொழிக்கத் திருநீலகண்டத் திருப்பதிகம் பாடியருளி யதுமாகிய திருக்கொடிமாடச் செங்குன்றூரில் (திருச்செங் கோடு) வாழ்ந்து வந்தவர்.

**புலமை :—**

இலக்கிய ஆராய்ச்சியிலும், கவியியற்றுதலிலும் வல்லுநர். ஒரு சமயம் இராமநாதபுரம் அரசர் பெருங்கொடை வள்ளலான பாஸ்கரசேதுபதியரசரவைக்கு இவர் சென்றபோது மகாவித்துவான், ரா. இராகவையங்கார்,

---

முன் 225-ம் பக்கத் தொடர்ச்சி)

கொண்டுள்ளது. எனவே அதனாலே ஏவப்பட்ட உள்ளத்தோடு என்றும் பொருள் ஆகும். முதலிலிருந்து முடிவு வரை வஞ்சனை யால் ஏவப்பட்ட உள்ளம் என்றும் பொருள் கொள்ளலாம். இதற்கு எல்லாம் மேலாகத் தன்னுடைய வஞ்சனையால் அர சனையும் தான் எண்ணியபடி செய்யச் செய்யும் வன்னெஞ்சம் படைத்தவன் என்பதுதோன்ற அரசனையும் இவ்வாறு ஏவுதலில் வல்ல உள்ளம் படைத்தோன் என்றும் கூறலாம். ஊர்க்காப் பாளரை அழைத்துக்கொண்டு கோவலன் இருந்த இடத்திற்குப் போகப் புறப்படுகின்றான். இதனோடு முடிகின்றது இக்காட்சி.

தலையோர் நுங்கின் தீஞ்சேறு மிசைய
இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்
கடையோர் விடுவாய்ப் பிசிநெடு சுடுகிழங்கு நுகர்
(புறம் — 225)

என்ற பாடலைக்கூறிக் கருத்தை வினவினர். இவர் சேனையின் முற்பகுதி நுங்கு தின்ற இடத்தில், அதன் இடைப்பகுதி பனம் பழம் உண்ண, அதன் பிற்பகுதி பனங்கிழங்கு தின்றனர். ஒன்றுமாறிப் பிறிதுவர மூன்று மாதம் ஆகும். எனவே அவர் சேனை நடந்தால் அது புறப்பட்ட இடத்தில் நீங்க ஆறு மாதம் ஆகும். அவ்வளவிற்று அதன் நீட்டம். இக்கருத்தைக் கம்ப நாடரும் தமது காப்பியத்தில்,

"எழுந்திலன்; எழுந்து இடைப் படரும் சேனையின்
கொழுந்துபோய்க் கொடிமதில் மிதிலை கூடிற்றே"
(பாலகாண்டம் எழுச்சிப்படலம் — செய்யுள் 24)

என அமைத்துள்ளனர் என்று கூறவே ஐயங்கார் வியப்புற்றனர்.

**கவித்துவம் :—**

மற்றும் இந்த ஈற்றடியைவைத்து அரண்மனையிலுள்ள குலதெய்வமாகிய ஸ்ரீராஜராஜேஸ்வரி அம்மன் மீது ஒரு கவி கூறுக என்று,

..................................இந்தீ
'வரகு சுமக்க வினையே சுமந்திட்ட மைக்கண்ணியே'

என்ற அடியைத் தந்தனர். (இதில் புலவரை மருட்ட வரகு சுமக்கும்படி வினையிருந்ததா? என்ற பொருள்படும் தொடர் அமைந்திருத்தல் காண்க) இவர் வெகு விரைவில் ஒரு செய்யுள் தொடங்கி அதன் மூன்றும் அடியின் இறுதியில் 'இந்தீ' என்று வரப் பாடலை முடித்துக் காட்டினர். பாடலின் கருத்து. (இந்தீவரம் — நீலோற்பலம், குசுமம் — மலர், கவின் — அழகு.) நீலோற்பல மலரின் அழகைத் தாங்கிய கண்ணியே யென்பது. இதனை அருகிருந்து உற்றுக் கவனித்துவந்த சேதுபதி மன்னரும் இவருக்குப் பெருங்கொடை நல்கினர். அதை மூலதன

மாகக் கொண்டுதான் இவர் விவேகதிவாகரன் என்னும் பத்திரிகையை நடத்தினர். அப்பத்திரிகையின் தலைப்பில் சேது சகாயம் என்று பொறிக்கப்பட்டிருக்கும்.

**புலமைப் பணி :—**

சரித்திர ஆராய்ச்சி, கல்வெட்டு இவைகளில் வல்லுநர். பெரும்பாலும் கொங்குநாடு பற்றிய இட விசேடங்களையும், பல சரித உண்மைகளையும் ஆராய்ந்து வெளிப்படுத்தியவர்.

**சமயப் பணி :—**

அர்த்தநாரீசுவரரைப் பற்றிய (உமையொரு பாகர்) புராண வரலாற்றுக்கியைந்த பிருங்கி முனிவர் (இவரைப்பற்றிப் பிரபு லிங்கலீலையிற் காண்க) திருமேனி அதுவரை அவரது ஊர்ச் சிவன் கோயிலில் இல்லாதிருந்ததை யறிந்து அதைச் செய்து வைத்தவர்.

## பொதுப்பணி

**சங்கம் :—**

சைவசமாசம் என்று ஒரு சங்கம் நிறுவி ஆண்டுதோறும் பல பெரியார்களைக்கொண்டு சொற்பொழிவு ஆற்றுவித்துச் சைவத்தையும் தமிழையும் பரப்பியவர். அருகிலுள்ள சமீன்தார்களை யெல்லாம் அதில் ஈடுபடுத்தியவர். சேலம் மாவட்டம் நீதிபதியாக விளங்கியவரும் சிவஞான பாடியம் முதல் வெளியீட்டில் [உலகம் அழியினும் சைவக்கொள்கைகள் அழியாதன என்பது போன்ற பல உண்மைகள் அடங்கியது] எழுதியவருமான திரு. J. M. நல்லசாமிப்பிள்ளை அவர்கள் B. A., B. L., போன்றவர்கள் வந்து இதில் கலந்து சிறப்பிக்கச் செய்தவர்.

**பத்திரிகை :—**

விவேக திவாகரன் என்னும் ஒரு வாராந்தப் பத்திரிகை நடத்தியவர்.

**நூல்நிலையம் :—**

தமது சைவ சமாசத்தின் சார்பில் ஒரு நூல்நிலையம் நிறுவி, அக்காலத்து இப்பக்கங்களின் டெப்டி கலக்டர் ஆக இருந்த

சே. சிவஞானம்பிள்ளை (திருநெல்வேலி) பேரால் அதற்குச் சிவஞானபுத்தகக் கோசம் எனப் பெயர் வைத்து நடத்தி வந்தவர்.

**உறுதுணையாளர் :—**

இதுபோன்ற பணியில் இவருக்கு உறுதுணையாயிருந்த புலவர்கள் குமாரமங்கலம் பெரும்புலவர் ஆறுமுக உபாத்தியாயர், டாக்டர் P. சுப்பராயனுக்கு இளமையில் தமிழாசியராக இருந்த விசாகப்பெருமாள் முதலியார், வடமொழிப் புலவர் மகாதேவ சாஸ்திரிகள் முதலியோர் ஆவர்.

**பிறசெயல் :—**

ஒருகால் ஆசிரியர் புலவர் ஏறு, அ. வரதநஞ்சயனுர் இவரை முதன்முறை சந்தித்தபோது அவரைப் பரீட்சிக்கும் பொருட்டு அங்கிருந்த ஒரு உட்காரும் நாற்காலியை (a chair) ச் சுட்டி இதன் பெயர் (குறிச்சி) வர ஒரு பாடல் கூறுக என்றலும், அவர் உடனே ஒரு கவி 'நறைச் சந்தவார்குழல்'— என்று தொடங்கி மூன்றும் அடியின் ஈற்றில்

> .................... 'உமையொரு பாகன் திருவடியைக்
> குறிச்சிந்தி ராதியர்க் கெட்டாத முத்தியுங் கூடுவரே'

என்று முடித்துக்காட்ட உவந்து அவரைப் பாராட்டினர். (இப் பாட்டில் குறிச்சு — குறித்து என்பதின் போலி)

**வெளியீடுகள் :—**

இவர் சொந்த அச்சுக்கூடம் ஒன்று வைத்து அதன் மூலம் பல நூல்களை வெளியிட்டனர். திருச்செங்கோட்டு இறைவர் வருக்கமாலை, திருச்செங்கோட்டு மான்மியம் உரைநடை, கொங்குமண்டலசதகம், பட்டாலியழகர்க் குறவஞ்சி, நல்ல தம்பிச் சர்க்கரை மன்ருடியார் காதல் முதலியனவாகும். (இறைவன் வருக்கமாலை — ஆத்திசூடி போன்றது. அம்பிகைபாகன், ஆறணிசடையன், இளம்பிறை சூடி, ஈருருவானேன் எனவரும்)

---

# கம்பன் கண்ட திருவவதாரம்

வித்துவான் திரு. வெ. சுப்பிரமணியன் அவர்கள்,
தமிழாசிரியர்,
ஸ்ரீ வெங்கடகிருஷ்ண உயர்நிலைப்பள்ளி,
கணியூர், கோவை.



பத்துத் திசைகளிலும் தடையின்றிச் செல்லவல்ல தேரை யுடைய தசரத மன்னன் சிறப்புற ஆட்சிசெய்து ஈடு இணை யில்லாத பெருமையோடு விளங்கினன். அறுபதினுயிரம் ஆண்டுகள் ஆட்சி செய்தமையைக் கணக்கிட்டு ஓர்ந்தான். அப்போது அவன் மனத்திடைத் தோன்றிய ஒரு பெரிய வருத்தம் சொல்லுந்தரத்ததன்று. மகனில்லாக் குறையே அவன் உள் ளத்தை உருக்கியது. முன்பு முனிவரிடம் பெற்ற சாபத்தையும் எண்ணினுன். அங்ஙனமாயின் மகன் பிறக்கவேண்டுமே! அதன் வழியறிய வேண்டுமென்று கருதிய மன்னன் தன்குல குருவான பிரம்மதேவனை யொத்த வசிட்ட முனிவனை வணங்கி னுன். முனிவர்க்குத் தான் ஆட்சி செய்த அறுபதினுயிரம் (மிக நீண்ட காலத்தையும்) ஆண்டுகளையும் நினைவு படுத்தினுன். அவன் தன் ஆட்சியில் பகைவரே யில்லாது நாடு நலம்பெற ஆண்டவன். வீரத்தில் சிறந்து விளங்கியவன். தேவேந்திர னுடன் போர்செய்ய வந்த சம்பராசுரனை எதிர்த்து வென்று அத் தேவேந்திரனுக்கு அவனுடைய நாட்டை உரிமையாக்கியவன். அத்தகைய வீரனுகிய தசரதன் தன்கண்போன்று காத்து வந்த நாட்டைத் தனக்குப் பிறகு நன்கு காக்க வல்லாரில்லையே! காப்பவரின்மையான் நாடு கெடுமே என்ற துயர் மன்னனை வருத்தியது. அக்குறையானது மகனில்லாக் குறையினும் பெருங் குறையாக மன்னனுக்குப் பெருந்துன்பத்தைக் கொடுத்தது.

அறுபதி குயிர மாண்டும் மாண்டுற
உறுபகை யொடுக்கியிவ் வுலகை யோம்பினேன்
பிறிதொரு குறையிலை யெற்பின் வையகம்
மறுகுறு மென்பதோர் மறுக்க முண்டரோ

வசிட்ட முனிவர் தயரத மன்னனது குறையைத் தீர்ப்ப தற்கு என்ன செய்யலாமென நிடுநினைப்பதாயினர். முன்பு தேவர் களும் முனிவர்களும் திருமாலைச் சரணமடைந்து திருவின் நாயக! பத்துத் தலைகளையுடைய இராவணனாலும் அவன் தம்பிய ராலும் மற்றும் பல அரக்கர்களாலும் விண்ணவரும் மண்ண வரும் தத்தம் நற்கருமங்களைச் செய்ய இயலாது வருந்து கின்றனர். இனி உய்வதற்கு வேறு வழியில்லை. இவ்வார்த்தை களைச் சொல்லும்போது பெருந்துயர மீதூரப் பெருமூச்சுவிட்டு நின்றார்கள்.

ஐயிரு தலையினான் அனுச ராதியாம்
மெய்வலி யரக்கரால் விண்ணு மண்ணுமே
செய்தவ மிழந்தன திருவி னாயக
உய்திற னில்லையென்(று) உயிர்ப்பு வீங்கினார்.

செங்கண் நாயக! அரக்கர்கள் எங்களிடம் பெற்ற நல்ல வரங்களால் மிக்க வலிமையடைந்து மூன்றுலகங்களிலும் பெரும் அழிவைச் செய்திருக்கிறார்கள். இந்தக் கொடுமையை நீங்கள் ஒழிக்காவிட்டால் விரைவில் மூவுலகமும் அவர்களால் அழிக்கப்பட்டுவிடும். இங்ஙனம் வருந்திக் கூறி வணங்கி நின்றனர்.

தன்னைச் சரணமடைந்தவர்களைக் காப்பவரான திருமால், அவர்களை நோக்கி வருந்தாதீர்கள்! என்றார். மாயத்தன்மை யுள்ள அரக்கரின் வரத்தையும் வாழ்வையும் சாம்பராகும்படிச் செய்வேன். அங்ஙனம் செய்ய கடல் போன்ற யானை தேர் குதிரைப் படைகளையுடையவனாகிய தயரத மன்னனின் மகனாய்ப் புவியில் பிறப்போம்; மற்றும் நமது சங்குசக்கரமும் அனந் தனும் எமது தம்பியர்களாக வந்து அயோத்தியில் அம்மன்னன் மக்களாக அவதரிப்பர் என்று கூறியருளினார்.

மசரத மணியவர் வரமும் வாழ்வுமோர்
நிசரத கணைகளால் நீறு செய்ய யாம்
கசரத துரகமாக் கடல்கொள் காவலன்
தசரதன் மதலையாய் வருதுந் தாரணி.

தேவர்கள் திருமாலின் நன்மொழியைக் கேட்டு மிக மகிழ்ந்து அவர் வேண்டுகோள்படி காடுகளில் வானரங்களைத் தத்தம் கூறுகத் தோற்றுவித்தனர். கரடியரசனுகிய சாம்பவான் பிரமதேவன்கூறும். தேவேந்தரனின் அமிசம் வாலி. அவன் மைந்தன் அங்கதன் சந்திரனின் அம்சம். அந்த வாலிக்குத் தம்பியாகிய சுக்கிரீவன் சூரிய தேவனின் அமிசமாவன். நீலன் என்னும் வானரன் அக்கினி தேவனின் கூறும். வாயு உருத்திரமூர்த்தி என்ற இருவரது கூறுனவன் அனுமான். மற்றதைத் தேவர்களின் கூறுய்ப்பல வானரங்கள் தோன்றினர்.

முன்பு நடந்த இந்தச் செய்தியை வசிட்டர் நினைவு கூர்ந்தார். வலிய தோளையுடைய அரசனே, மூவுலகையும் காக்க வல்ல புத்திரரை அளிக்கும் வேள்வியைச் செய்தால் உன் மனத் துயரம் நீங்கும் என்று கூறினுர். அவ்வியாகம் செய்வதற்கு யாது செய்ய வேண்டும் என்பதைத் தெரிவிக்க வேண்டும் என்ருர் தசரதர்.

காசியப முனிவரின் மகன் விபண்டகன். அவ்விபண்டக முனிவருடைய மகன் இருசியசிருங்கன். இம்முனிவர் மான் கொம்பையுடையவர். ஆதலால் இவர் இருசியசிருங்கன் என்றழைக்கப்பட்டார். மகாகவி கம்பர் இவரைக் கலைக்கோட்டு முனிவர் என்றும், இரலை சிங்கன் என்றும், இருசியசிருங்கன் என்றும், கூறியுள்ளார். கலைமானிடமாகப் பிறந்த தென்றும் அதனுல் இம்முனிவன் முகத்தில் ஒற்றைக் கலைமான் கொம்புடைய வனுயினன் என்றும் கூறுவர். , இம்முனிவன் காலத்திருந்தே "தலையில் கொம்பு முளைத்தவனே" என்ற முதுமொழியும், தோன்றியிருக்க வேண்டுமல்லவா?

சிவபெருமானும் புகழ்தற்குரிய ஞானத்தைப் படைத்தவனுன இருசியசிருங்க முனிவன் தபோவனத்திலேயே தன்

தந்தைக்குப் பணிவிடை செய்து கொண்டிருப்பான். அதனால் நாடு நகரங்களிலுள்ள மனிதர்களைப் பார்த்தறியாதவன். தவம் செய்வாரல்லாத மக்களை விலங்குகளென்னவே எண்ணுபவன். "தவஞ்செய்வார் தங்கருமஞ்செய்வார்" என்றார் திருவள்ளுவரும். அம்முனிவன் சிறந்த மாதவம் புரிந்தவன். அனைத்து கலைகளிலும் வல்லவன். பிரமனும் சிவனும் புகழும் ஞானி. பொறுமையில் சிறந்தவன்.

இத்துணைச் சிறப்புடைய முனிவரான கலைக்கோட்டு முனிவர் அங்க தேசத்தை ஆளும் உரோமபாதன் நகரில் இருக்கின்றார். உரோமபாதன் காலில் மயிருள்ளவன் என்பது பொருள். (சுவயம்பு என்று பேர் கொண்ட பிரமனுக்கு மனு என்ற குமாரன் பிறந்தான். அவன் சுவயம்புமனு எனப் படுவான். அவன் மகன் உத்தானபாதன் ஆவன். அவ்வுத் தான பாதனது மகன் உரோமபாதன் என்பவன்) அவ்வுரோம பாதமன்னனது நாட்டில் மழை பெய்யாததால் கொடிய வறுமை ஏற்பட்டது. கலைக்கோட்டுமுனிவன் வந்தால் மழை பொழியும் என்று முனிவர்கள் கூறலும், உரோமபாதன் அம்முனிவரை அழைத்து வருவது யாங்ஙனம் என்று சிந்திக்க, சிலவிலைமகளிர் தாம் அழைத்து வருவதாகக் கூறினர். அதனால் அரசன் மனம் மகிழ்ந்து, அவர்களுக்கு அனுமதியளிக்க அவர்கள் சென்று இருசியசிருங்கர் ஆசிரமத்திற்கு அருகில் தங்கினார்கள். இம்மாதர்கள் இருசியசிருங்க முனிவரது தந்தை இல்லாத சமயத்தில் முனிவர் வேடத்தில் அங்கு சென்றார்கள். அம்முனிவர் இவர்களையும் முனிவராகவே கருதி உபசரணை செய்தார். பின்னர் அவர்கள் சிலநாளில் இவரைத் தன்னாசிரமத்திற்கு வருமாறு அழைத்தார்கள். அம்மகளிரின் வேண்டுகோள்படியே அம்முனிவரும் அவர்கள் பின்னேசெல்ல அவர்கள் அங்கதேசத்திற்குச் செல்லலாயினர். அம்முனிவர் வரும் போதே உரோமபாதன் நகரில் பெருமழை பொழிந்தது. இருசியசிருங்கன் வருகையை மழைக் குறியாலறிந்து எதிர் கொண்டு சென்று வரவேற்றுத் தன்னரண்மனைக்கு அழைத்து வந்து ஈரெட்டு உபசாரங்கள் செய்தான். பிறகு சாந்தை என்ற பெண்ணை அவருக்குக் கன்னிகாதானமாகக் கொடுத்தான்.

அம்முனிவரும் சாந்தையுடன் அந்நகரிலே தங்கி இருக்கிறுர் என்ற இச்செய்தியை வசிட்டர் தசரதனுக்குக் கூறி அந்த இருசியசிருங்கர் வந்து புத்திரகாமேட்டி யாகத்தை நடத்தி முடித்தால் மக்கள் பிறப்பர் என்றும் கூறினுர்.

தசரதமன்னனும் அங்ஙனமே உரோமபாதன் நகருக்குப் புறப்பட்டுச் சென்று உரோமபாதனிடம் தன் கருத்தைக் கூறினுர். அம்மன்னனும் மரியாதை செய்து தசரதரை வரவேற்ருன். அவர் திருவுளப்படியே இருசியசிருங்க முனிவரை அனுப்புவதாகக் கூறினுர். பின்னர் தசரத மன்னன் விடைபெற்றுச் செல்ல உரோமபாதனும் இருசியசிருங்க முனிவரிடம் தசரத மன்னன் கருத்தைச் சொல்லி அவ்வண்ணமே செய்தருள வேண்டினுர்.

இரலைசிருங்க முனிவரும் அயோத்திமா நகருக்குப் புறப்பட்டுச் சென்ருர். தசரதமன்னனும் மிகமகிழ்ந்தவனுய் எதிர்கொண்டு சென்றழைத்துவந்து எண்ணிரண்டு உபசரணைகளைச் செய்தார். கலைக்கோட்டு முனிவர் தம்மையழைப்பித்த காரணத்தை வினவ தசரதர் நெடுங்காலம் யாதொரு துன்பமில்லாமல் பூமி பாரத்தைத் தாங்கினேன். எனக்குப் பிறகு இப்பூமி பாரத்தை தாங்க மக்கள் பிறக்கவில்லை. இப்புவியை ஆள வல்ல தன்மையுடைய நன்மக்களைப் பெறத் தாங்கள் அருள வேண்டும் என்று கூறினுர்.

உலப்பில்பல் லாண்டெலாம் உறுக ணின்றியே
தலப்பொறை யாற்றினென் தனயர் வந்திலர்
அலப்புநீர் உடுத்தபார் அளிக்கு மைந்தரை
நலப்புகழ் பெறவினி நல்க வேண்டுமால்

தசரனது உள்ளக்கிடக்கையை அறிந்த முனிவர் புத்திரனை யளிக்கும் யாகத்தைச் செய்யவேண்டும் என்ருர். அங்ஙனமே யாகத்திற்கு வேண்டும் யாவும் செய்தமைத்த பின் யாகம் இயற்றினுர் முனிவர். தசரதன் தலைவனுய் அமர்ந்திருந்தான். கலைக்கோட்டு முனிவர் முதலில் ஒராண்டு காலம் அசுவமேத யாகத்தைச் செய்தார். பின்னர் அந்த யாககுண்டத்தில் புத்திரகாமேட்டியாகத்தைச் செய்தார். அப்போது தேவர்கள் திருமாலின்

அவதாரம் வந்துவிட்டதென்று கருதி மகிழ்ந்தார்கள். அம்மகிழ் வால் அவர்கள் கற்பக மலர்களைப்பொழிந்து ஆரவாரித்தார்கள்.

முகமலர் ஒளிதர மொய்த்து வானுளோர்
அகவிரை நறுமலர் தூவி யார்த்தெழத்
தகவுடை முனியுமத் தழலி னுப்பணே
மகவருள் ஆகுதி வழங்கி னனரோ

அந்த வேள்விக் குண்டத்தினின்று தீப்போலச் சிவந்த நிறத்தை யுடைய தலைமயிரையும் செந்நிறமுடைய கண்களையும் உடைய ஒரு பூதமானது அழகிய பொன்னுலான தட்டத்தில் தூய்மையான அமுதத்தை யொத்த பிண்டத்தை எடுத்துக் கொண்டு விரைவாக எழுந்து வந்தது. வந்த அந்தப் பூதமானது தான் கொணர்ந்த அந்தத்தட்டினைப் பூமியில் வைத்துவிட்டுத் திரும்பவும் அவ்வேள்விக் குண்டத்திலே சென்று மறைந்தது. அப்போது கலைக்கோட்டு முனிவர் தசரதனிடம் பூதம் வைத் துள்ள உணவினை அவன் மனைவியர்க்கு முறைப்படி கொடுக்கும் படிக் கூறினார். தசரத மன்னனும் தன் முதல் மனைவியான கோசலா தேவிக்கு அவ்வமுதத்தில் பா தி யை த் தந்தான்; பின்னர் கைகேயிக்கு மிதம் உள்ளதிற் பாதியைக் கொடுத்தான். சுமித்திரைக்குப் பின்னு முள்ளதிற் பாதியைக் கொடுத்தான்; எஞ்சியதைப் பின்னும் அவளுக்கே கொடுத்தான். வேள்வியும் முற்றுப்பெற்றது. தசரதன் அந்தணர்கட்கும் அரசர்கட்கும் தக்க மரியாதைகளைச் செய்து சரயூ நதியில் நீராடினான். யாகத் திற்குப் பிறகு நீராடுதல் மங்கல வழக்கமாகும். அரசன் அரசவையை அடைந்து வசிட்டரையும், இருசிய சிருங்க முனி வரையும் வணங்கி இனிதிருந்தான். இருசியசிருங்க முனிவர் விடைபெற்றுத் தமதிருப்பிடம் சென்றார்.

தசரதச் சக்கரவர்த்தியின் தேவியர் மூவரும் சில காலங் களில் கருவுற்று நிறைந்து, முகத்தோடு உடம்பும் சந்திரனுக்கு ஒப்பு என்னுமாறு விளங்கினர். நற்குணங்களுக்கு இருப்பிட மான கோசலா தேவி யானவள் சித்திரை மாதத்தில் புனர்பூச நாளில் கடக ஓரையில் பு வி மா து மகிழ்ந்து சிறக்கவும், தேவர்கள் அனைவரும் மகிழ்ச்சியினாலாரவாரிக்கவும்,சிறந்த தரும தேவதை மனத்தடுமாற்றம் நீங்கி மகிழ்ந்தோங்கவும் அருமை

யான வேதங்கட்கும் அறிதற்கு அருமையானவனும், எல்லா வுலகங்களையும் பேருழிக் காலத்தில் தனது திருவயிற்றினுள்ளே மறைத்து வைத்துக் காத்தவனும் மைபோன்ற அழகிய மேகத்தின் ஒளிமயமானவனுமாகிய திருமாலை உலகிலுள்ளோர் நலம் பெறுமாறு பெற்ருள்.

ஒருபகல் உலகெலாம் உதரத் துட்பொதிந்து
அருமறைக் குணர்வரு மவனை அஞ்சனக்
கருமுகிற் கொழுந்(து) எழில் காட்டுஞ் சோதியைத்
திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை.

இந்திரன் முதலாகிய தேவர்கள் வாழ்த்தவும் எட்டுத்திக்கிலுள்ளார் மகிழ்ந்து ஆரவாரிக்கவும் கைகேயி பூச நட்சத்திரத்தில் மீன லக்கினத்தில் ஒரு புதல்வனைப் பெற்ருள். இவன் சுதரிசன மென்ற சக்கராயுதத்தின் அமிசமானவன். சுமித்திரா தேவி ஆயிலிய நட்சத்திரத்தில் கடக லக்கினத்தில் ஒரு புதல்வனைப் பெற்ருள். இவன் ஆதிசேடனின் அமிசமாதலால் அதற்குறிய ஆயிலியம் இவன் உதித்தற்கு ஏற்றது. மேலும் அத்தேவியானவள் மக நட்சத்திரத்தில் சிங்கராசியில் மீண்டும் ஒரு மகனைப் பெற்ருள். அவன் பாஞ்ச சன்னிய மென்னும் சங்கத்தின் அமிசமானவன். வான்மீகி முனிவர் திருமாலே நால்வகையாக அவதரித்துள்ளார் என்று கூறியுள்ளார். ஆயின் கம்பர் இங்ஙனம் கூறக் காரணம் யாதெனின் தாராசாரோப நிடதம் முதலிய நூல்களின் உட்கருத்தை ஆராய்ந்தே கூறியுள்ளார் என்பது பொருந்தும். பாரதியாரும் உபநிடத நூலுக்கு இணையான நூல் இப்பாரிலுண்டோ? எனப் புகழ்ந்துரைத் துள்ளார். அப்போது கொடுமைபுரியும் அரக்கர்கள் அழிந்தார்கள் என்ற மகிழ்வால் தேவமாதர்கள் ஆடினுர்கள். கின்னரர்கள் அமுதம் போலினிய ஏழிசைகளைப் பாடினுர்கள். பல வாத்தியங்கள் முழங்கின: தேவர்கள் எங்கும் ஓடி உலாவினுர்கள்.

ஆடினர் அரம்பையர் அமுத வேழிசை
பாடினர் கின்னரர் துவைத்த பல்லியம்
வீடினர் அரக்கர்என்(று) உவக்கும் விம்மலால்
ஓடினர் உலவினர் உம்பர் முற்றுமே.

தசரத மன்னன் நீராடித் தானஞ் செய்து சிறந்த குமாரர்களது அழகிய முகத்தைப் பார்த்தான். எழுபிறப்புத் தீவினையும் ஒழியும் பொருட்டு ஏழியாண்டு நாட்டில் வரி வாங்குவதை நீக்கியும், சிறைப்பட்ட அரசரை விடுவித்தும், அந்தணர்கள் விரதங்களைக் குறைவில்லாமல் நடத்தவும், ஆலயங்களைப் புதுப்பித்து நாடோறும் இருகாலமும் தீபங்களேற்றவும், இறைவனுக்கு மாலைகள் சாத்தவும் திருவிழாக்கள் செய்யவும் கட்டளையிட்டான் தசரத மன்னன்.

அரசகுமாரர்கள் பிறந்த செய்தியையுணர்ந்த அந்நகரத்து மக்களெல்லாம் பெருமகிழ்ச்சி யடைந்தனர். திருமாலே திருவவதரித்தார் என்பதை அறிந்தார்களாதலின் அவர் அங்ஙனம் பெருமகிழ்வு எய்தினர் என்று கவி கூறியுள்ளார். தெருக்களை எல்லாம் அழகுபடுத்தி மணம் கமழச்செய்தனர். இங்ஙனம் அந்நகரத்து மக்கள் மனம் மகிழ்ந்திருக்க, பதின்மூன்றும் நாளன்று வசிட்டர் அரசகுமாரர் நால்வருக்கும் பெயர் சூட்டுவராயினர்.

முதலை பற்றியிழுத்ததால் அதனோடு போரிட்டுத் தளர்ச்சி யடைந்த துதிக்கையை உடைய யானையானது கடவுளின் தன்மையை யறிந்து பாம்பணையில் துயில்வோனாகிய திருமாலை ஆதிமூலமே என்றழைக்க அப்பொழுதே அங்கு வந்து அவ்யானையைக் காத்தருளின உண்மைப் பொருளாகிய திருநாராயண மூர்த்திக்கு 'ராம' என்ற பெயரைச் சூட்டினர் வசிட்டர்.

"ஓம் நமோ நாராயணாய நம" என்னும் எட்டெழுத்திலிருந்து ஓம் நமச்சிவாய வென்னும் ஐந்தெழுத்திலிருந்தும் அமைக்கப்பட்டது ராம நாமம். அதில் ரா என்னும் எழுத்தை ர்+ஆ எனப் பிரித்தால் 'ர்' என்னும் மெய்யெழுத்து உபாதி சம்பந்தமில்லாத பிரம்மத்தைக் காட்டுகிறது. 'ஆ' என்னும் உயிரெழுத்து மாயைக் காண்பிக்கிறது. இவ்விரண்டின் சேர்க்கையாலான 'ரா' என்னுமெழுத்து தேசோமயமான ஆன்மாவிற்கு ஏற்பட்டுள்ள மாயா சம்பந்தத்தைக் காட்டுகிறது. 'ம' என்னுமெழுத்து அமுதவித்து; மங்கலத்தைக் காண்பிக்கிறது. காரணமாய் அமைந்துள்ள சிறிய ஆலம் விதையில் அதன் காரியமான பல கிளைகளையுடைய பெரியமரம் அடங்கியிருக்

கிறதோ அதுபோல ராம நாமத்தில் சராசரங்களையுடைய அனைத்துலகும் அடங்கி இருக்கிறது. மாயாசம்பந்தம் இல்லாதது ஆன்மா. மகாரம் முக்தியைக் கொடுக்கக்கூடியது. தத்துவமசி என்பது மகா வாக்கியம். அதில் தத் என்ற சொல்லின் பொருளை 'ரா' என்ற முதலெழுத்தும் துவம் என்ற சொல்லின் பொருளை மகாரமும் இவ்விரண்டு எழுத்தின் சேர்க்கையான ராமநாமம் 'அஸி' என்றதின் பொருளையும் காட்டுகிறது. 'தத்துவமசி' நீயே அந்த ஆன்மா என்பது பொருளாம். தானான தன்மயமேயல்லாது வேறொன்றுமில்லை. தத்துவமசி என்பது பேரின்பத்தை அருளுமேயல்லாது இவ்வுலக நலன்களையருளாது. ஆனால் ராம நாமமோ மூன்று உலகத்திற்கும் மூலமந்திரமாயமைந்து யாவரும் சொல்லும் தன்மையுடையதாய் அமைந்துள்ளது. இம்மைக்கும் மறுமைக்கும் வேண்டும் நலன்களை அருளக் கூடியது. இப்பிறவியிலேயே எழுவகைப்பட்ட பிறப்புக்களாகிய நோயைப் போக்கும் மருந்தாக உள்ளது. உயர்திணை அஃறிணையாகிய எல்லாப் பொருளுக்கும் அருளுந்தன்மையுடையது. இவ்வழகிய கருத்தினைக் கம்பர் பிறிதோரிடத்தில்,

"மும்மைசால் உலகுக் கெல்லாம் மூலமந் திரத்தை முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும் பதத்தைத் தானே
இம்மையே எழுமை நோய்க்கும் மருந்தினை இராமன் என்னும்
செம்மைசேர் நாமம்."

என்று கூறியுள்ளார். இவ்வுண்மையை அறிந்த வசிட்ட முனிவர் யாவருக்கும் அருள் செய்பவனான கோசலை பெற்ற மகனுக்கு 'ராம' என்னும் பெயரைப் பொருத்தமறிந்து சூட்டினார். முறையே கைகேயின் மகனுக்குப் பரதன் என்றும், சுமித்திரையின் மக்களுக்கு இலக்குவன் என்றும், சத்துருக்கனன் என்றும் பெயரைச் சூட்டினார். பரதன் என்பதற்கு பறிப்பவன் என்று பொருள். கைகேயி நாட்டைப் பறிப்பதற்கு இவனே காரணமா யிருந்ததால் இப்பெயரை முக்காலமும் உணர்ந்த வசிட்டர் சூட்டினார்.

---

# திருவருட்பிரகாச வள்ளலாரென்னும் சிதம்பர இராமலிங்க சற்குரு புலம்பற்கண்ணி

தொகுத்தவர், திரு. P. P. துரைசாமி அவர்கள்,
கோயமுத்தூர்.

காப்பு.

குறள் — வெண்பா.

சற்குருவின்பாற் புலம்பற் சாற்றுதற்குத் தந்திமுக
னெற்குவர மீவா னிசைந்து.

இராகம் — நீலாம்புரி.

அருளே வடிவா—யவனி மிசைச்செல்வ
மருதூ ரவதரித்த—மாத்தகைய சற்குருவே. 1

கருணிக நன்மரபிற்—காருண்யங் கொண்டே
யருணிடித் தோங்க—அவதரித்த சற்குருவே. 2

இராமலிந்த யாவரையு—மீடேற்றத் தோன்று
திராமலிங்குவந்த—இராமலிங்க சற்குருவே. 3

அருட்பிர காசவள்ள—லாயுதித்தி யார்க்குந்
தெருட்பெருஞ்சித்தெல்லாந்—தெரிக்கவந்த சற்குருவே 4

தெருட்பெருஞ் சித்தெவையுந்—தேர்ந்துல கோருய்ய
வருட் சித்தராக—வவதரித்த சற்குருவே. 5

அன்பே வடிவா—யருளே யுயிராக
இன்பே யுணவா—யிலகவந்த சற்குருவே. 6

பன்மார்க்க மெல்லாம்—பசையற் றெழிந்திடவுஞ்
சன்மார்க்க மோங்கிடவுஞ்—சாற்றவந்த சற்குருவே. 7

மதங்கடந்த வாய்மைநெறி—மாந்தர்பெற வென்றும்
பதங்கடந்த வுண்மெய்—பயிற்றவந்த சற்குருவே. 8

கல்லார்க்குங் கற்றூர்க்குங்—காலங் கடந்தநிலை
எல்லா மெளிதி—லியம்பவந்த சற்குருவே. 9

ஆறுமுடிவின் முடிவி—ளூழ்ந்தபொருள் மன்பதைக்கே
கூறுதற்கிப் பாரிற்—குலவியவென் சற்குருவே 10

(தொடரும்)

# இயற்கையிலுறையும் இறைவன்

திருமதி ந. சாந்தநாயகி அவர்கள், B. A.,
ஒடத்துறை.

ஐம்புனைந்தியற்றுக் கவின்பெறு வனப்பாகிய இயற்கையில் இறைவன் எத்தனை எத்தனையோ கோடி யின்பங்களைப் படைத்தருளியுள்ளான்.

"சித்தினை அசித்துடன் இணைத்தாய்— அங்கு
சேரும் ஐம்பூதத்து வியனுல கமைத்தாய்
அத்தனை யுலகமும் வர்ணக் களஞ்சியமாகப்
பலபல நல்லழகுகளைச் சமைத்தாய்"

என இதனை வியக்கின்றார் நம் பாரதி.

இயற்கையெழிலில் மனத்தைப் பறிகொடுத்து வாழ்ந்த தமிழ்க்கவிகள் பலர். பண்டைத் தமிழ்க்கவிகளெல்லாம் இயற்கையில் திளைத்த வாழ்க்கையராய், நிலம், நீர், காற்று, ஆகாயம், நெருப்பு என்ற பஞ்ச பூதங்களினூடும் இறைவனைக் கண்டு வணங்கினர். இயற்கையின் அழகினை இறைவன் திருமேனியின் அழகாகப் போற்றினர்.

"நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாப் புணர்ந்துநின்றான்
உலகே ழெனத்திசை பத்தெனத் தானொருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ"

என்று சைவசமய குரவருள் ஒருவரான மாணிக்கவாசகர் இயற்கையிலே இறைவனைக் கண்டு வழிபட்டார். மேலும்அவர் அருளிய திருவெம்பாவையில் பெண்கள் நீராடும் பொய்கை சிவனும் உமையுமாகக் காட்சியளிப்பதாகக் கூறுகிறார்.

"பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்
அங்கங் குருகினத்தால் பின்னும் அரவத்தால்
தங்கள் மலங்கழுவு வார்வந்து சார்தலினுல்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
பொங்கு மடுவில் புகப்பாய்ந்து பாய்ந்துநம்
சங்கம் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய்."

பொய்கையில் பூத்திருந்த பசுமையான குவளைமலர்கள் இறைவன் திருநீலகண்டத்தையும் இறைவியின் கண்களையும், தாமரை மலர்கள் இறைவன் திருவடிகளையும், இறைவியின் உறுப்புக் களையும், வதிந்த குருகுகள் இறைவியின் வெண்சங்கு வளையல் களையும், இறைவனுடைய குருக்கத்தி மாலையையும், நீர்ப்பாம்பு இறைவியின் கூந்தலையும் (கூந்தலின் நீட்சி) இறைவன் திரு மேனியிலுள்ள பாம்பணிகளையும் நினைவுறுத்தியதனுல் அப் பொய்கையைப் பெண்கள், சக்தியாகவும் சிவனுகவும் நினைவு படுத்திக்கொண்டு நீராடியதாகச் சொல்கிருர்.

மணிவாசகப் பெருமான் இதுபோல இன்னும் எவ்வளவோ பாடல்களில் இறைவனே, இயற்கையில் உறைவதாகக் கூறுகிருர்.

"பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்ருய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்ருய் விளைந்தாய் போற்றி"

"பாரொடு விண்ணுய்ப் பரந்த எம்பரனே", "வானுந்திசைகளும் மாகடலும் ஆயபிரான்" என்பன அவற்றுள் சில.

இனி அப்பர் கண்ட காட்சியை நாம் காணுவோம். அவர் மாசில்வீணையிலும், மாலைமதியத்திலும், வீசும் தென்றற்காற்றி லேயும் வீங்கிளவேனிலின் இடையேயும் இறைவனின் இணையடி நிழலைக் காண்கிருர்.

தாயுமான சுவாமிகள்,

“பண்ணேனுனக்கான பூசையொருவடிவிலே
பாவித் திறைஞ்ச வாங்கே
பார்க்கின்ற மலரூடு நீயேயிருத்தியப்
பனிமலரெடுக்க மனமும் நண்ணேன்”

என்று உருகுகின்ருர். இறைவன் எங்குமே நிறைந்திருப்பதால் இறைவனை ஒருவடிவிலே வைத்து வழிபடமாட்டாமலும், எல்லாமலர்களிலும் இறைவனின் அருள்முகத்தைக் காணுவதாக அவற்றினைப் பறிக்க மனம் ஒருப்படாமலும் இருக்கும் அவர் நிலையை யாதுகூறிப் போற்றுவது? தாயுமானவர் இறைவன் இயற்கையில் உறைகின்ற தன்மையை வெளிப்படுத்தியதோடு மட்டும் நில்லாமல் அந்த இயற்கைக்கு ஒரு சிறிதும் இன்னலிழைக்க விரும்பவில்லையென்பதும் மேற்கூறிய பாடலினின்றும் புலப்படுகிறது.

இளங்கோவோ இயற்கைவழிபாட்டையும், இறைவழிபாட்டையும் ஒன்ருகவே கூறுகிருர். அவர் கடவுள் வாழ்த்தாக மற்றபுலவர்கள் கூறுவதுபோல, ஒரு குறிப்பிட்ட தெய்வத்தைப் பற்றிக் கூருமல் இயற்கைப் பொருட்களாய திங்களையும் ஞாயிற்றையும், மாமழையையும் போற்றி மற்றவரினும் ஒருபடி மேலாகவே சென்றுவிடுகிருர்.

“திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண்குடைபோன்றிவ்
அங்க ணுலகளித்த லான்
ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்
காவிரிநாடன் திகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்
மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்
நாமநீர் வேலி யுலகிற் கவனளிபோல்
மேனின்று தான்சுரத்த லான்”

என இயம்புகிருர். இங்குத் திங்களையும் ஞாயிற்றையும் மாமழையையும் போற்றுவது சோழனுடைய வெண்கொற்றக்

குடையினையும், ஆணைச் சக்கரத்தையும் அவனுடைய கருணைத் தன்மையினையும் சிறப்பிப்பதற்கு மட்டுமல்ல. இறைவனின் எழில்திருமேனிதான் இயற்கை என்பதை வற்புறுத்தவும் அங் ஙனம் அமைத்தார் என்றும் கொள்ளலாமல்லவா?

"நிலனும் விசும்பா நிமிர்காலீர் தீயாம்
அலர்கதிராம் வான்மதியா மன்றி— மலர்கொன்றை
ஒண்ணறுந் தாரா னெருவனிய மானனுமாய்
எண்ணிறந்த எப்பொருளு மாம்"

என்ற பாடலும், நிலம், ஆகாயம், காற்று, நீர், தீ, சூரியன், சந்திரன், முதலிய இயற்கைப் பொருட்களில் இறைவன் நிறைந் திருப்பதைக் குறிப்பிடுகிறது. அன்றியும் சிவன் நீர்வடிவின னுய்த் திருவானைக்காவிலும், நெருப்பாய்த் திருவண்ணுமலை யிலும், ஆகாயமாய்ச் சிதம்பரத்திலும், நிலமாய்க்கச்சியிலும், காற்ருய்க் காளத்தியிலும் விற்றிருப்பதாய்க் கூறுவர்.

பாரதியார் காக்கைச் சிறகின் கருமைநிறத்திலும் மரங் களின் பச்சை நிறத்திலும் நந்தலாலனின் நிறத்தைக் காண் பதாகவும், தீக்குள் விரலை வைத்தால் இறைவனைத் தீண்டுமின் பத்தைப் பெறுவதாகவும் பாடிப்பரவசமடைந்தார்.

எனவே அருட்புலவர்கள் சொல்லாலும் கருத்தாலும் இயற் கையே இறைவன் திருமேனியாகும் என்பதும், இயற்கையைப் போற்றின் இறைவனைப் போற்றியதாகுமென்றும் இயற்கை நெறியை மேற்கொள்ளின் இறைவன் நெறியைப் பற்றுவதாகு மென்றும், அந்நெறிசென்று ஈறிலா இன்பம் துய்ப்பதுதான் நம்பிறப்பின் பயனென்றும் தெளிவாகிறது.



# சங்கோய் இலக்கியம்

திரு. கு. பழநிசாமி அவர்கள், M. A.
தமிழ் விரிவுரையாளர்,
Sri. K. G. S. ஆர்ட்ஸ் காலேஜ், அருள்நந்திநகர்.

## குரவையாடும் பெண்கள்

கதிரவனின் வெம்மை மிகுதியாக இருக்கின்றது. பரண் மேலிருந்து பாடிக்கொண்டிருந்த பெண்ணின் பாட்டொலியும் நின்று விட்டது. வெயிலின் வெம்மைக்கு நீரின் தண்மை நாடிச், சுனேக்குப் புறப்பட்டிருப்பாள் போலும்.

"மொய்யார் தடம்பொய்கைபுக்கு முகேரென்னக் கையால் குடைந்து குடைந்து" குளிர் நீராடுவதிலும் "நெடுநீர்க்குட்டத் துத் துடும்எனப் பாய்ந்து குளித்து மணற்கொண்டு" குளமாடு வதிலும் கன்னியர்க்கும் காளேயர்க்கும் பெருவிருப்பம் உண்டு. இன்றும் கிராமப்புறங்களில் இளம்பெண்களும், ஆண்களும் நீர் நிலேகளில் உச்சிப் போதில் ஆடிக் கண் சிவப்பதனேக் காணலாம்.

மலேச்சாரல் பகுதிகளில் உள்ள திணேப்புனங்களில் காவல் காக்கும் பெண்கள் எல்லாம் நீராடப் புறப்பட்டு விட்டார்கள். குறமகளிர் ஆடுகின்ற ஆட்டத்தில் பொய்கையே கலங்கு கின்றது. பருவத்தின் செழுமை தவழும், களேப்பறியாத அவர்கள் உடலும் களேத்து விடுகின்றது. அந்த அளவிற்கு நீரில் குதிபோட்டு விட்டுக் கரையேறுகின்றனர். துவட்டக் கூடத் தேவையில்லே. உடல் உலர்ந்து விடுகின்றது.

எல்லோரும் மரத்தின் நிழலில் ஒன்ருகச் சேருகின்றனர். ஒத்த வயதுடையவர்கள் ஒன்ருகச் சேர்ந்து விட்டால் களிப்

பிற்குக் கேட்கவா வேண்டும்? நீரில் களைத்த சோர்வுபோக மதுக்கிண்ணத்தை நாடுகின்றன அம்மங்கையரின் உள்ளங்கள். நீராடியதால் உள்ளகம் சிவந்துபோன அவர்களின் கண்கள் மதுவுண்ட மயக்கத்தில் மேலும் மயங்கிச் சிவக்கின்றன. உணர்ச்சியின் சுதந்திரம் உயிர்த்துடிப்புடன் எழுந்து மலர் கின்றது. மரத்தின் கொழுநிழல். மதுவின் போதை. மண் ணெல்லாம் அவர்கள் காலில் சுழன்ருடுவதுபோல ஒரு மயக்கம். பாட்டுப் பிறக்கிறது. தாளமும் பிறக்கிறது. அதோ ஆட் டமும் பிறந்து விட்டது. ஆம், குரவைக் கூத்து. செஞ்சடை யான் குன்றத்தில் நிகழ்கின்ற இக்குரவைக் கூத்து பார்ப் போரை எல்லாம் பரவசப்படுத்துகின்றது.

தான் ஆடி உலகத்தை ஆட்டிப் படைக்கின்ருன் இறை வன். அவனது ஊழிக் கூத்தில் இவ்வுலகமே ஒடுங்கி மறை கின்றது. அவன் ஆடும் கூத்துக்கள் பல. அவனது பெயரே கூத்தன்தான். அவனது திருக் கூத்துக்களில் அடங் கிக்கிடக்கும் பொருள்களும் ஏராளம். எனவேதான் அவன் ஆடும் குரவையைக் கோக்குரவை என்று சிறப்பித்துச் சொல்லு கின்ருேம். இதையெல்லாம் எண்ணும்போது அந்த ருத்திர தாண்டவ மூர்த்தியின் மலையில் இக்குறவர் இளங்கன்னியராடும் குரவை கவிஞருக்கு என்ன உணர்த்தியதோ நாமறியோம். ஆயினும் அக்காட்சியை அழகுற எடுத்தியம்புகின்ருர்.

தடங்குடைந்த கோங்கைக் குறமகளிர் தங்கள்
இடம்புகுந்தங் கின்னறவம் மாந்தி—உடன்கலந்து
மாக்குரவை ஆடி மகிழ்ந்துவக்கும் ஈங்கோயே
கோக்குரவை ஆடிகொழுங் குன்று.

**காதல் இருவரின் வாழ்க்கை:**

இவைகளே அன்றி வேறுபல் காட்சிகள் புலவரின் நெஞ் சில் அழியாத ஓவியங்களாகப் பதிகின்றன. குழந்தைகளையும், சிறுவர்களையும், இளையவர்களையும் கண்டு அவர்கள் வாழ் வோவியங்களைச் சுவைத்துரைத்த நக்கீரர் ஈங்கோய் மலையின் மனித வாழ்வில் மனைமாட்சி, விருந்தோம்பல் ஆகிய இல்லறப் பண்பின் மற்ருெரு பகுதியினையும் காண்கின்ருர்.

கருத்தொருமித்த கணவன் மனைவியரின் இல்லறந்தான் நல்லறமாக மலரமுடியும். "காதல் இருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்ட இன்பம்" இருக்குமானல் அதுவே வையத்தில் வாழ்வாங்கு வாழும் பாங்காகின்றது. இயற்கையிலேயே இப்படி மலர்ச்சியுற்ற சில குடும்பங்களைக், கல்லாத குறவர்களின் வாழ்விலே கண்டு வியக்கின்ருர் கவிஞர்பெருமான்.

கருங்களிற்று. வெண்கொம்பால் செய்யப்பெற்ற உலக்கையைக் கொண்டு உரலிலேதினையைப் போட்டு இடிக்கின்ருள் ஒரு குறத்தி. அவளது நெஞ்சம் வெளியில் சென்றிருக்கும் தன் கணவனது வரவையே எண்ணிக் கொண்டிருக்கின்றது. மாவும் இடித்தாகிவிட்டது. கலக்கத் தேன் இல்லையே! என்னசெய்வது? சாப்பாட்டு வேளையும் நெருங்கிவிட்டது. அவரும் வருகின்ற நேரந்தான். வருகிறவர் கையில் தேன் கொண்டு வந்தால்தான் ஆயிற்று இல்லை என்ருல்........? வருகின்றவருக்கு எதைக் கொடுப்பது? அவர் உண்ண வேண்டாமா? அவள் நெஞ்சம் இப்படி எண்ணிக்கொண்டே வேலை செய்கின்றது.

ஆயிற்று. குறவனும் வந்து விட்டான். வெறுங்கையுடன் வரவில்லை. அவள் எண்ணியதுபோலவே கையில் தேன்புட்டியுடன் வருகின்ருன். தான் எதிர் பார்த்ததுபோலவே நடந்துவிட்டதில் அக்குறப் பெண்ணிற்கு ஒரே மகிழ்ச்சி. கணவனை அன்போடு வரவேற்று அவன் கொண்டு வந்த தேனைக்கலந்து அவனுக்கு உண்ணக் கொடுத்துவிட்டுத் தானும் உண்ணுகின்ருள். அந்த ஒருவன் ஒருத்தி வாழ்வின் நிறைவைக் கண்டு சிறக்கின்றது நக்கீர தேவரின் நெஞ்சம்.

கருங்களிற்றின் வெண்கொம்பால் கல்வில்வாய் நல்லார்
பெருந்தினைவெண் பிண்டி இடிப்ப—வருங்குறவன்
கைக்கொணரும் செந்தேன் கலந்துண்ணும் ஈங்கோயே
மைக்கொணரும் கண்டன் மலை.

குடும்பக்காட்சி:

அப்படியே மேலே செல்கின்ருர். அங்கே அவருக்கு பிறிதொரு குடும்பக் காட்சி காத்திருக்கின்றது. கணவன் மனைவி, மக்கள் எல்லோரும் கும்பலாக அமர்ந்துகொண்டு உணவருந்திக்

கொண்டிருக்கின்றுர்கள். மலைநாட்டுக் குறத்தியர் தாங்கள் தயாரித்த வெண்திணை மாவைத் தங்கள் கணவன்மாராகிய வீர மறக்குலத்து வேடர்களுக்கும் பிள்ளைகளுக்கும்இட்டுத் தாங் களும் உண்ணுகின்றனர். இதனைக் கண்ணுறுகின்றுர் புலவர்.

ஒருவன் ஒருத்தி வாழ்விலிருந்து சற்று மலர்ந்து மக்க ளோடுகூடிய அன்பான குடும்பக்காட்சியாய் அது விளங்கு கின்றது. குடும்பத்தினைப் போற்றிக் காத்தல் பெரும் பொறுப்பு வாய்ந்த ஒன்ருகும். அதனை எப்போதும் தனது கடமை என எண்ணி இன்முகத்துடன் செய்கின்ற மனைவியர் வாய்த்து விட்டாலோ அதனிற் பெரும் பேறு இல்லை எனலாம். அதனை உணர்ந்து போற்றி மதிக்கின்றநிலை குடும்பத்தின் மறுபகுதி யினருக்கு இருந்துவிட்டாலோ அதுதான் சிறந்த வாழும் முறைமையாகி விடுகின்றது. இச் சிறப்பான தத்துவங்களை அடக்கிய சில குடும்பங்களைத்தான் ஈங்கோய் மலை தன் னகத்தே கொண்டு காட்சியளிக் கின்றது. இன்பக்குமரன் தந்தையின் மலையில் எங்கு நோக்கினும் இத்தகைய நிறைவான இன்பக் காட்சிகள்தாம் தென்படுகின்றன. இதனையெல்லாம் நேரில் காண்கின்ற உள்ளம் அதனை வெளியில் சொல்ல வேண்டும் என்று விரும்புதல் இயற்கையே! எனவேதான் இதனைச் சீர்ஈங்கோய் என்று சிறப்பிக்கின்றுர்.

சாரல் குறத்தியர்கள் தண்மருப்பால் வெண்பிண்டி
சேரத் தருக்கி மதுக்கலந்து—வீரத்
தமரினிதா உண்ணும்சீர் ஈங்கோயே, இன்பக்
குமரர்முது தாதையார் குன்று.

விருந்து எதிர்கோடல் :

அடுத்ததொரு காட்சியில் இல்லற வாழ்வின் சிறந்தநிலை ஒன்றை அக்கானக் குறமக்களிடம் காண்கின்றேம். அன்பானது தான் தன் மனைவி, மக்கள் என்று வளர்ந்து நொதுமலாளரா கிய புதுவராய் வரும் விருந்தினர் மாட்டும் சென்று அடைதலே அதன் இயற்கைப்போக்கு. தொடர்பிலார் மாட்டும் செல்லக் கூடிய இவ்வன்பு அருள் உணர்ச்சியாய் விருந்தினைப்

போற்றும் உணர்வாய் இங்குதான் முளைத்தெழுகின்றது. எனவே தான் இதனை அருள்என்னும் அன்பின் குழவிஎன்றார் வள்ளுவரும்.

செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பதில் ஓர் இறைமைப் பண்பு விளங்குகின்றது அல்லவா? எனவே வானவர்களும் அவர்களை விழைகின்றனர் என்று கூறுகின்றோம். சிறப்புமிக்க இவ்விருந்தேற்கும் பண்பை "மருந்தேயாயினும் விருந்தோடுண்" என்று போற்றியவர்கள் நம்மவர்கள். "தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர்கோடல்" என்று விரித்துரைக்கின்றது சிலப்பதிகாரம். தென்னாட்டின் ஒவ்வொரு இனத்திற்கும் இப்பண்பைப் போற்றிக் காக்கும் சொந்தமும் பெருமையும் உண்டு.

பெரும்பாணாற்றுப்படை என்ற நமது நூல் அதனை ஓர் விருந்து நூல் என்று சொல்கின்ற அளவிற்குப் பல்வேறு வகையான உணவு வகைகளைக் கொண்டு பல்வேறு இனத்தவர் விருந்தெதிர் கொள்ளும் சிறப்பினைப் பற்றிப் பேசுகின்றது.

அதில் எயினர் வீட்டில் விருந்தொன்று நடக்கின்றது. எளிமைமிக்க அவர்கள் மனச்செம்மையுடன் தங்கள் பகுதியில் கிடைக்கும் பெரிய தேக்கு இலையை விரித்துத் தெய்வத்திற்குப் படைப்பதுபோல அன்போடும் பண்போடும் நிறைவோடும் விருந்து செய்விக்கின்றார்கள்.

> தெய்வமடையின் தேக்கிலைக் குவைஇறும்
> பைதீர் கடும்பொடு பதம்மிக.

என்று வருகின்றது அந்நூலில்.

இந்த ஈங்கோய் மலையிலும் இப்படித்தான் ஒரு விருந்து நடக்கின்றது. வாழ்வு எவ்வளவு எளிமையாகவேனும் இருக்கலாம். ஆனால் இனிய முகமும் சொற்களுந்தாம் விருந்தெதிர் கொள்வதற்கு வேண்டிய அடிப்படைப் பண்புகளாகும். இப்பண்புகளைக் கொண்ட குடும்பமொன்றின் விருந்தினைத்தான் கவிஞர் இங்கே குறிப்பிடுகின்றார்.

இவர்களும் தம்மலைச்சாரலில் கிடைக்கக் கூடிய தேக்கு இலையினையே விரித்து உணவிடுகின்றார்கள். எளிமையும்

உயர்வும் நிறைந்த உணவுத் தட்டன்றே அது? தங்களிடம் கிடைத்த உணவை அழகாக இனிமையாகப் பேசிக்கொண்டே பரிமாறுகின்றாள். உணவிடும்போது அவளது கை வண்ண மும், உணவில் அவளது செய்வண்ணமும் அவளது பேச்சில் அவள் நெஞ்சத்தின் செம்மையும் புலப்படுகிறது.

உணவு பரிமாறுவதே ஒரு கலை. மிகக் குறைவாக உண் பவரையும் அதிகமாக உண்ணவைக்கும் திறன் சிலருடைய உபசரிப்பிலே அடங்கிக் கிடக்கும். இங்கும் கருமையான அக் குறத்தி அப்படித்தான் பரிமாறுகின்றாள். இனிமையாக அவர் களுடன் பேசிக்கொண்டே உணவிடுகின்றாள். உணவின் சிறப்பை எல்லாம் சொல்லிப் பரிமாறுகின்றாள். கண்ணப்பர் கூட இப்படித்தான் "தேனும் உடன் கலந்தது இது தித்திக் கும்" என்று சிறப்புரைத்து இறைவனுக்கு ஊன் விருந்து அளித்த நிலையைப் பெரிய புராணத்துள் காணலாம். இது யாரும் சொல்லித்தராமலே அவர்களிடம் அமைந்து கிடக்கின்ற பண்பாகும். இவ்வாறு சிறந்த தெய்விகக் கலைகள் பல வற்றில் பாலிற்படு நெய்யினளாய் விளங்கி, அக்கலைக்குரிய வனுகத் திகழும் சிவபெருமானின் மலையில் இச்சிறந்த பண் பினைக் கண்டு போற்றுகின்றார் புலவர்.

செந்தினையின் வெண்பிண்டி பச்சைத்தே னல்குழைந்து
வந்த விருந்தூட்டும் மணிக்குறத்தி—பந்தியாத
தேக்கிலைகள் இட்டுச் சிறப்புரைக்கும் ஈங்கோயே
மாக்கலைகள் வைத்தான் மலை.

சாதாரணக் குறத்தியர்கள் வாழ்வுதான் எவ்வளவு பெரிய பண்பாட்டுலகமாகக் காட்சி யளிக்கின்றது? ஈங்கோய் மலையின் செம்மைமிக்க இம்மனித வாழ்வு ஈங்கோய் மலைஎழு பதைப் படிப்போரின் நெஞ்சினைப் பற்றாமல் இருக்க முடியாது. இயற்கையோடியைந்து வஞ்சமிலாத அவர்கள் வாழ்வும் மகிழ்வும் பிறபண்புகளும் நமதுள்ளங்களைக் கவர்கின்றன.

———

# நல்லுருத்திரன் நல்லுரை

வித்துவான் - திரு. ச. நாராயணசாமி அவர்கள்,
கழக உயர்நிலைப்பள்ளி, P. இராமச்சந்திரபுரம்.



சோழர் மரபில் தோன்றித் தமிழ் வளர்த்த அரசர் பெரு மக்கள் பலராவர். அவருள் நல்லுரத்திரன் என்னும் நலம்சால் அரசன், ஒருவன். 'கற்றறிந்தார் ஏத்தும் கலி' எனப்போற்றப் பெறும் கலித்தொகையின்கண், முல்லைத்திணை பாடித் தமி ழன்னைக்குச் சிறப்பளித்தான்.' அவன் பாடிய பதினேழு கலிப் பாக்களும் பதினேழு மணிகளெனப் போற்றத் தகுந்தவை. அதில் காடும் காடுசார்ந்த நிலமாய முல்லை நிலத்து ஆயர் களின் அகவாழ்க்கையினை அழகுறப் பாடிப் பாராட்டியுள்ளான்.

நல்லுருத்திரன் நாட்டு மக்களின் நல்வாழ்வில் நாட்டங் கொண்டவன். மக்கள் நலங்கருதி அவர் பகர்ந்த நல்லுரை யொன்று புறநானூறு என்னும் தொகைநூற்கண் இன்தமிழ்ப் பாடலாகத் திகழ்கின்றது. அவன் ஊக்கம் உடையவன்; உயர்வே உள்ளும் உளம் படைத்தவன், என்பதை அவன் பாடல் உணர்த்தி நிற்கின்றது. அதன் மாட்சியினைக் காண்போம்.

உலக வாழ்வினை மேற்கொண்ட மக்கள் தனித்தியங்குதல் என்பது இயலாத ஒன்று. அவ்வாறு தனித்து வாழின் அது வாழ்வாகாது; மரவாழ்வேயாம். எனவே தம் வாழ்வு சிறக்க- நல்வாழ்வாகத் திகழப் பலரோடு கூடி வாழவேண்டிய இன்றி யமையாமை ஒவ்வொருவருக்கும் ஏற்படுகின்றது. கூட்டுவாழ் வின் பழக்கத்தின் விளைவுகள் ஒருவர்பால் காணலாம். ஒருவர் ஒழுக்கத்தினைத் தாமும் மேற்கொள்ளும் இயல்பினர் மக்கள். மக்கள் அனைவரும் ஒத்த பண்புடையோரும் அல்லர். நற் பண்பு நிறைந்த நல்லோர் சிலரையும், தீயொழுக்கம் படைத்த தீயோர் சிலரையும் கொண்டிலங்குவதே இவ்வுலகியற்கை. நல்

லோரும் தீயோரும் கலந்துறையும் உலகில் கூடிவாழும் மக்கள் விழிப்புடையவராதல் வேண்டும். நல்லோர் உறவால் தீயோர் நல்லவராதல் அரிது. ஆனால் தீயோர் உறவால் நல்லோர் தீயோராதல் எளிது. அதலின், ஒருவரை நண்பராகக் கொள்வ தன் முன் அவர்தம் இயல்புகளை உள்ளவாறு அறிந்து கொள்ளு தல் வேண்டும். நண்பனை நாடிச்செல்லும் ஒருவனுக்கு நட்புக் கொள்ளத்தக்கவன் யாவன்? தகாதவன் யாவன்? என்பது குறித்து "நல்லுருத்திரன் கூறும் நல்லுரை" அரும்பெரும் அறி வுரையாகும்.

உழவர்கள் நிலத்தை உழுது பயிர் செய்ய, நெல் விளைந்து முற்றிக்கதிர் வளைந்து நிற்கும் காலத்தை எதிர்நோக்கி இருப் பது எலி. உழவர் அறியாவண்ணம், தன் வளையினின்று இராக் காலத்தே வெளிப்போந்து, விளைந்த நெல்மணிகளைச் சிறிது சிறிதாகக் கடித்துக் கொண்டுபோய் வளையினுள் சேர்த்து வைக்கும் இயல்புடையது.

தன்னை வருத்துகின்ற பசியைத் தீர்த்துக்கொள்வதற்காகக் காடெல்லாம் அலைந்து திரிந்து, கொழுத்த வலிமை பொருந்திய காட்டுப்பன்றியைக் கொன்று உண்ண முயல்கின்றது புலி யொன்று. புலி தாக்கப் பன்றி இடப்பக்கத்தே இறந்து விழு கின்றது. புலிக்குப்பசி நனி பெரிதாயினும் இடப்பக்கத்தே விழ்ந்ததை உண்ணாத உறுதி, உள்ளத்தை உரனடையச் செய்கிறது. தன்னை வருத்தும் பசியையும் பொருட்படுத்தாது, பன்றியை உண்ணாது சென்றுவிடுகிறது. மறுநாள் தன் முழையி யின்று வெளிப்பட்டு, பெரிய ஆண்யானை ஒன்றைத்தாக்கி, அதை வலப்புறத்தே விழுமாறு விழ்த்தி, உண்டு தன் பசியைப் போக்கும் பேராண்மை கொண்டு இலங்குகிறது புலி.

எலியனைய இயல்புடையவர், தம் முயற்சியில் வாழ எண் ணாது, அதன் மீது நம்பிக்கையற்று, சோம்பி இருந்து பிறர் முயன்று தேடிவைத்த செல்வத்தை அவர் அறியாதவண்ணம் கவர்ந்து சென்று, தானும் உண்ணாது சேர்த்து வைப்பர். புலி யனைய மாந்தரோ தாமே அரிதின் முயன்று, செல்வத்தைத் தேடித்துய்க்க எண்ணுவர். பழியோடு வருவன செய்து

அதனுல் பெருஞ்செல்வம் பெறலாமெனினும் அதனை வெறுத்து, ஒதுக்கி அறத்தாறு நின்று ஒண் பொருள் ஈட்டும் உரவோராவர். எலியனையார், உள்ளத்தில் உறுதியில்லாதவர்; அஞ்சும் இயல்பினர், சேர்த்து வைத்ததைக் காப்பாற்றும் வலியற்றவர். அத்தகையோர் பெரும்பொருள் கொண்டவராய்த் திகழ்ந்தாலும் அவரோடு உயர்ந்தோர் உறவு கொள்ளார்.

பழிபாவம் இவைகட்கு ஆட்பட்டுச்சேர்த்த பெருஞ்செல்வத்தைக் காட்டிலும் பழிபாவம் இன்றி வறுமை வாழ்வு வாழ்வதே மேலான வாழ்வு. தம் முயற்சியால் அன்று உழைத்து உண்ணும் வறுமை வாழ்வை மேற்கொண்டிருப்பினும் பிறர் பொருளைக்கவரும் எண்ணம் இல்லாது தானே முயன்று தேடும் ஆற்றலும் வாய்ந்தவர் நட்பே மேலானது. அவர்தம் நட்பினையே அறிவுடையோர் நாடுவர். எனவே எலியனையார் இல்லம், புகாது, புலியனையார் நட்பினை வலிந்து பெற்று ஊக்கமும் உறுதியும் கொண்டு, பழிநீங்கி வையகத்து இன்புற்று வாழ, அவன் உரைக்கும் நல்லுரையை மேற்கொண்டு ஒழுகுவோமாக.

> விளைபதச் சீறிடம் நோக்கி வளைகதிர்
> வல்சி கொண்டுஅளை மல்க வைக்கும்
> எலிமுயன் றனைய ராகி உள்ளதம்
> வளன்வலி யுறுக்கும் உளமி லாளரொடு
> இயைந்த கேண்மை இல்லா கியரோ
> கடுங்கண் கேழல் இடம்பட வீழ்ந்தென
> அன்றுஅவண் உண்ணு தாகி வழிநாள்
> பெருமலை விடகரம் புலம்ப வேட்டெழுந்து
> இருங்களிற்று ஒருத்தல் நல்வலம் படுக்கும்
> புலிபசித் தன்ன மெலிவில் உள்ளத்து
> உரனுடையாளர் கேண்மையொடு
> இயைந்த வைகல் உளவா கியரோ.

*—புறநானூறு 190.*

---

## அறிவிப்பு

# ஸ்ரீ இராமநாத சுவாமி தேவஸ்தானம்

## இராமேஸ்வரம்

# கோடி அர்ச்சனை

ஒருநாமம் ஒருருவம் ஒன்றுமிலாற் காயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ. — திருவாசகம்.

பக்தர்களுக்குக் கிடைத்தற்கரிய சிறந்த வாய்ப்பு.

இராமேசுவரம் ஸ்ரீ ராமநாதசுவாமி கோயில் இரண்டாம் பிரகாரத்தின் மாபெரும் திருப்பணிக்கு நிதிதிரட்ட இக்கோடி அர்ச்சனை தொடங்கப் பெறுகின்றது.

தோடங்கும் நாள்: சுபகிருது வருடம் பங்குனி மாதம் 26-ம்உ
(8-4-'63) திங்கட் கிழமை முதல்

கோடி அர்ச்சனை சம்பந்தமான சகஸ்ரநாம (ஆயிரம் நாமாவளி) அர்ச்சனைக் கட்டணம் ரு. 10/- இதனைக் கோயில் நிர்வாக அதிகாரிக்கு மணியார்டர் அல்லது செக் மூலம் அனுப்புவதுடன், பெயர், நட்சத்திரம் விலாசம் முதலியன குறித்தனுப்பினால், அர்ச்சனை செய்து பிரசாதம் அனுப்பப்பெறும். பன்னிரண்டு டிக்கட்டு பெற்றால் பிரதிமாதமும் அந்த நட்சத்திரத்தில் ஒரு வருடத்திற்கு அவர்கள் பெயரால் அர்ச்சனை செய்யப்பெறும்.

அர்ச்சனை நடைபெறும் நேரம்: { காலை 9 முதல் 11 மணி
மாலை 7 முதல் 8 மணி

பக்த கோடிகள் இந்த நல்ல வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொண்டு 'ஸ்ரீ இராமநாதப் பெருமான் திருவருள் பெற்றின்புறு மாறு கேட்டுக்கொள்ளப் பெறுகிறார்கள்',

ௐ
SIVA SIVA

# RAJAH OF KALAHASTI MEMORIAL ADDITIONAL FEEDING CHARITY AT VARANASI (BENARES) Rs. 30,000/-

This Endowment is created by His Holiness Kasi vasi Arulnandi Tambiran Swamigal of Kasimutt, Tirupanandal in memory of Sri Rajesri Damara Kumara Venkatappa Nayanim varu Rajah of Kalahasti, who made the gift of Mahankalideviputhur village in Kalahasti Taluk to our predecessor in title, Silasri Kasivasi Kumaraswami Tambiran Swamigal in the year 1681 of Salivahana Era corresponding to A. D. 1759 for conducting feeding charity at Benares as long as the Sun and Moon last. The Government having taken over the said village under the Estates Abolition Act, 1948 and granted an interim compensation of Rs. 8,032/- in the year 1955, we founded an endowment No. 191 for Rs.8,500/- in the name of the said Raja of Kalahasti by a Registered Document dated 31—5—1955 for free feeding of Brahmins and poor at Benares.

The Government have now paid a final compensation of Rs. 24,367-25 in respect of the said M. D. Puthur village in O.P. No. 133 of 1962 of the Chittoor District Court, Estates Abolition Tribunal. This amount has been invested in Government Promissory Notes of 3% Conversion Loan of 1946 to the value of Rs. 30,000/- as described below and this will form the capital of the present additional endowment made

in memory of the said Rajah of Kalahasti for conducting daily feeding charity in our Sri Kumaraswami Mutt at Benares in addition to other endowments in force there. This endowment shall be styled as "Rajah of Kalasti Memorial Additional Feeding Charity at Varanasi (Benares)"

2. Details of Government Promissory Notes are CA. 234279 for Rs. 25,000/- CA. 241610 for Rs. 2,000/- CA. 241611 for Rs. 2,000/-, CA. 241071 for Rs. 500/- and CA. 241072 for Rs 500/- Total Rs. 30,000/-. The administration of the endowment shall vest in the Donor and his successors-in-interest.

3. The annual interest accruing on the capital shall be utilised for the daily feeding of brahmins and poor in our choultry at Varanasi (Benares) in addition to the other daily feeding charities.

4. The feeding shall be conducted in accordance with the Thitta Japtha prepared and approved monthly by the Donor and his successors-in-interest, which will depend upon the income derived and the prices of the commodities then current.

5. The amount may be reinvested from time to time in high interest yielding Government securities. This endowment shall not be diverted to any purpose other than that intended by the Donor.

Tirupanandal<br>Dated 20-3-1963 } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran.*

---

Registered at Tiruvadamarudur Sub-Registrar's office on 20-3-1963 as No. 19 of 1963 of Book 4 volume 50 pages 159 to 162

உ

சிவ சிவ

## மதுரையில்

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அகண்ட பாராயணத் திருமுறை நிதி

## முதற் பொருள் ரூ. 20,000/-



"பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்(து)
இருப்பிலே இருந்து வையை ஏட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்து ஓர் ஏன
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளரு கின்றாள் "

என்று புகழப்பெறும் தண்டமிழ் பயிலும் பாண்டி நாட்டில், "நெருப்பறியும் நீர்அறியும் நிலமறியும் தமிழின் இயல்" என்னுமாறு திருஞானசம்பந்தர், கனல்வாதம் புனல்வாதம் முதலியன புரிந்து சமண் மாசழித்துப் பாண்டியனை நெடுமாறனுக்கிச் சைவம் சாரச்செய்து, சைவ சமய ஸ்தாபனம் செய்யப்பெற்ற மதுரையில், ஆண்டுதோறும், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நாளாகிய வைகாசி அமரபக்ஷம் திருதியை நாளில் திருமுறை அகண்ட பாராயணம் நிகழ்த்துவித்தற் பொருட்டு இந்நிதி திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்றது. இது 'மதுரையில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவுநாள் அகண்ட பாராயணத் திருமுறை நிதி' எனப் பெயர் பெறும்.

2. இதற்குரிய சேமவைப்பு ரூ. 20,000/– (ரூபா இருபதினுயிரம்). இது ஆண்டொன்றுக்கு 3% வட்டி தரக்கூடிய அரசியல் கடன்தாள்களில் முதலீடு செய்யப்பெற்றுள்ளது. 3% கன்வர்ஷன் லோன் ஆப் 1946 – சர்க்கார் கடன் பத்திரம் எண். சிஏ. 158649– ரூ. 10,000/– சிஏ. 241612– ரூ. 2,000/– சிஏ. 241613– ரூ. 2,000/– சிஏ. 241614– ரூ. 2,000/– சிஏ. 241615– ரூ. 2,000/– சிஏ. 241609– ரூ. 1,000/– சிஏ. 241620– ரூ. 1,000/– ஆக ரூ. 20,000/– இது நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலிக்கப்பெற்று வரும்.

3. இச்சேம வைப்பினின்று கிடைக்கும் வட்டித் தொகையைக்கொண்டு ஆண்டுதோறும் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மகேசுவரபூசைத் திருநாளாகிய வைகாசி அமரபக்ஷத்திருதியை நாளில் மதுரை ஸ்ரீ மீனுட்சிசுந்தரேசுவரர் திருக்கோயிலில் நம்மால் நியமிக்கப்பெறும் திருமுறைவாணர்களைக்கொண்டு காலை 6 மணி முதல் இரவு 8 மணி வரையில் திருமுறை அகண்ட பாராயணம் நிகழ்த்துவிக்கப்பெறும். (நம்மால் 21-10-1956உ ரூ. 25,500/- முதற்பொருளில் நிறுவப்பெற்றுள்ள மதுரையில் இன்னிசைத் தேவார நிதியின்படி நம்மால் நியமிக்கப்பெறும் திருமுறைவாணர்களைக்கொண்டு இரவு 8 மணிக்குத் தொடங்கி மறுநாட் காலை 6 மணி வரை சிவமே நிலவும் ஆவணி மூலவீதிகளில் திருமுறை ஓதச்செய்தல் நடைபெற்று வருகின்றது.

4. ஆண்டுதோறும் வட்டி வரவுக்கு ஏற்ப நம்மால் தயாரிக்கப்பெறும் திட்ட ஜாப்தாவின்படி திருமுறை வாணர்களுக்குச் சன்மானம் அளிக்கப்பெறும்.

5. இவ்வட்டி வருமானம் வேறு எம்முறையிலேயும் பயன்படுத்தப்பெறமாட்டாது. இச்சேமவைப்பு அரசியலாரால் திருப்பியளிக்கப்பெறுமாயின் அதிக வட்டி தரக்கூடிய அரசியல் கடன் தாள்களில் முதலீடு செய்யப்பெறும். இம்முதற் பொருள் நம்பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்து வரும்.

"தம்மையே புகழ்ந் திச்சை பேசினும்
சார்வினும் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை
புகலூர் பாடுமின் புலவிர்காள்
இம்மை யேதரும் சோறும் கூறையும்
ஏத்த லாம்இடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோக மாள்வதற்(கு)
யாதும் ஐயுற வில்லையே. — சுந்தரர்.

Tirupanandal
Dated 21-3-1963. } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran.*

---

Registered at Tiruvadamarudhur Sub-Registrar's office on 22-3-1963 as No. 20 of 1963 of Book 4 volume 50 pages 162 to 164.

திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

## 'திருமுறை வெளியீடுகள்'



| | | | ரூ. ந. பை |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை | ... | 0 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | ... | 3 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும் புதிய பதிப்பு) | ... | 2 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, ,, | ... | 2 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் ,, | ... | 1 30 |
| 7* | திருவாசகம் ,, | ... | 0 56 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) | ... | 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலம்மட்டும்) | ... | 0 56 |
| 10* | திருமந்திரம் ,, (புதிய பதிப்பு) | ... | 2 25 |
| 11* | பதினோராந்திருமுறை ,, ,, | ... | 1 50 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் | ... | 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) (அச்சில்) | | |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு | ... | 0 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) | ... | 3 00 |
| 17 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) | ... | 1 75 |
| 18 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் ,, | ... | 2 75 |
| 19 | ,, யுத்த தேவகாண்டம் ,, | ... | 2 00 |
| 20 | ,, தக்ஷகாண்டம் ,, | ... | 1 50 |
| 21 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் | ... | 0 25 |
| 22 | கந்தரனுபூதி | ... | 0 13 |
| 23 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் | ... | 0 37 |
| 24 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் | ... | 0 06 |
| 25 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் | ... | 0 37 |
| 26 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 50 |
| 27 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 06 |
| 28 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 50 |
| 29 | திருக்குறள் – பொருட்பால் ,, | ... | 2 50 |
| 30 | திருக்குறள் – காமத்துப்பால் ,, | ... | 1 00 |
| | ஷை 28. 29. 30 திருக்குறள் 3 புத்தகமும் | ... | 4 00 |
| 31 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... | 0 75 |
| 32 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 13 |

Registered With the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.

Regd No. M. 5574:　　　　குமரகுருபரன்.

| | | |
|---|---|---|
| 33 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... 0 75 |
| 34 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... 0 37 |
| 35 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை - மதுரை மீனாட்சியம்மை குறம் | ... 2 75 |
| 36 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... 1 25 |
| 37 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை - தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... 1 00 |
| 38 | பண்டார மும்மணிக்கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... 1 00 |
| 39 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... 0 75 |
| 40 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... 0 50 |
| 41 | பெரியபுராணம் – உரைநடை | ... 2 00 |
| 42 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... 2 25 |
| 43 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... 0 50 |
| 44 | திருக்கயிலைத் திருமுறை | ... 0 37 |
| 45 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... 0 19 |
| 46 | செந்திலாண்டவன் மகிமை | ... 0 13 |
| 47 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... 1 37 |
| 48 | ௸ ௸ பொருட்பால் 2-ம் பதிப்பு | ... 2 75 |
| 49 | ௸ ௸ காமத்துப்பால் ௸ | ... 1 20 |
| 50 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... 0 50 |
| 51 | மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... 0 50 |
| 52 | கந்தரனுபூதி-தெளிவுரையுடன் | ... 0 35 |
| 53 | திருவாரூர்-திருப்பனுவல்கள் | ... 0 10 |
| 54 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி | ... 0 10 |
| 55 | பழமொழித்திருமுறை | ... 0 25 |
| 56 | திருவாரூர் நான்மணிமாலை | ... 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள், "சிவகாம விலாசம்" 53, பிள்ளையார்கோயில்தெரு, திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- ● இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 47, 48, 49) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் - '63.